*Ūl̲iyan̲*

*Malar 15, ital̲ 2*

*July 12, 1935*

Record no. 148

# ஊழியன்

மலர் 15 இதழ் 2




பகான் (பர்மா) தாப்பிஞ்ஞு கோவில்—ஊழியன.

## உள்ளுறை.

### முக்கிய விஷயங்கள்.




12—7—35

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கரு. சென்னை, யுவ ஞுல ஆனிமீ 28உ வெள்ளி (12-7-1935) இதழ் உ


இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடிலாது
சொந்தவா சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்தநிலத் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
சந்தமிலா ஊழியமே நான்கொண்டேன்
நல்லனவெர் நாளும் வாழ்க!

## பிராமணர்—அல்லாதார்

தென்னாட்டின் முன்னேற்றத்தை ஒருவாறு தடுத்து நிற்பது பிராமணர்—அல்லாதார் என்ற இப்பிரிவு. பிராமணர் என்பவர் பிறப்புப் பற்றிய ஒரு வகுப்பார் என்றும் அவரல்லாதார் என்போர் பிறப்பினால் அன்னார் ஒழிந்த மற்றையோர் என்றும் கருதப்படுகின்றனர். இவ் இரு சார்பு பற்றியும் பல்வேறு வகையில் தென்னாட்டில் சில ஆண்டுகளாகச் சச்சரவு நிகழ்த்தப்பட்டு வருகின்றது.

ஒரு கூட்டத்தார் தாங்கள் பிறவியில் பிராமணர்களெனவும் அது ஒரு உயர்ந்த வகுப்பு என்றும், ஏன்? மனித சமூகத்திலேயே தனிச் சிறப்பு வாய்ந்தது அந்த வகுப்பு என்றும், அந்த வகுப்பில் பிறந்த அனைவரும் மற்றெல்லோராலும் போற்றத் தக்கார் எனவும் தங்களைக் கூறிக் கொள்வதோடு மற்றையோரை இழித்தும் கூறுகின்றனர். அவர் அவ்வாறு கூறும்போது ஏனையோர் அவர்களை எதிர்த்து உண்மையை நிலைநாட்ட வேண்டுவது நியாயமேயாகும். ஆனால் அவர்களை எதிர்க்கப் புறப்பட்ட அல்லாதார் கூட்டத்தார் நேரிய வழியிற் செல்லவில்லை.

பிறப்பினால் வகுப்பு இல்லையென்பது சிறந்த கொள்கை. பிறப்பினால் வேறுபாடு இல்லையென்பது பண்டைக் காலத்துப் புகழ்பெற்று விளங்கிய வள்ளுவர், கம்பர் முதலான பேராசிரியர் பலர் கொள்கை. இன்றும் அறிஞர் பலர் அதனையே வலியுறுத்துகின்றார். "மனிதர் யாரும் ஒருநிகர் சமானமாக" வாழவேண்டும் என்பதே சீர்திருத்தக்காரர் நோக்கம். அவ் உயரிய கொள்கையை நிலைநாட்ட நேரிய வழியில் பெரிதும் முயல வேண்டுவது அறிஞர் கடமை.

ஆனால், தென்னாட்டில் எழுந்த அல்லாதார் கட்சி அக்காரியத்தைச் சரியாகச் செய்யவில்லை. அக்கட்சிக்குப் பெயர்தான் ஜஸ்டிஸ் கட்சியே தவிர, நியாயத்துக்கும் அக் கட்சிக்கும் சம்பந்தமில்லை. அக்கட்சி வகுப்பு வேற்றுமை உணர்ச்சியை ஒழிக்கும் ஒரே நோக்கத்தோடு மட்டும் உண்மையில் வேலை செய்திருக்குமானால் இதுகாறும் பெரும் பயன் பெற்றிருக்கும். பிராமணரல்லாதார்க்கு நலம் செய்வதாகச் சொல்லிக்கொண்டு அக்கட்சித் தலைவர்கள் அரசியலில் தலையிட்டுத் தேசத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்து தங்கள் தங்கள் மட்டில் நல்ல நிலைமையை அடைந்துகொள்ள முயன்றனர். காங்கிரஸ்க்காரர் விலகி நின்றபோது பதவிகளையும் பெற்றுக் கொண்டனர். காங்கிரஸ் அசெம்ப்ளித் தேர்தலில் கலந்து கொள்கிறது என்றவுடன் மரியாதையாகச் சும்மா இருந்து விடாது, இந்த மாகாணத்தில் ஜஸ்டிஸ் கட்சி போட்டியும் போட்டது. அதன் முடிவென்ன என்பதைப்பற்றி இங்கு விரிக்க வேண்டாம். அவ்வளவு சீக்கிரத்தில் மறக்கக்கூடிய அளவு கொண்டதில்லை நடந்த தேர்தலில் ஜஸ்டிஸ் கட்சியின் நிலைமை.

ஜஸ்டிஸ்கட்சி அரசியலில் தலையிடாமல் மனித சமத்துவத்துக்கு முயன்றிருந்தால் அது இக்காலம் எவ்வளவோ ஆக்கம் பெற்றிருக்

கும். காங்கிரஸ்க்காரரில் மிகப் பலர் அக்கட்சியில் கலந்து திருத்த வேலையில் முனைந்து நின்றிருப்பர். உண்மையில் பிராமணர் என்பவரால் குறைவு படுத்தப்படும் பிராமணரல்லாதார் என்பவரின் முன்னேற்றமே அக்கட்சியின் நோக்கமாக இருந்தால் அக்கட்சியின் போக்கு நிச்சயமாக வேறுவிதமாகவே இருந்திருக்கும். பிராமணரல்லாதார் முன்னேற்றம் என்பது வெளிப்போர்வையே தவிர உள் நோக்கம் உத்தியோக வேட்கை என்பதில் என்னே ஐயம்?

ஜஸ்டிஸ்க் கட்சித் தலைவர்கள் என்போரில் பலரை நாம் அறிவோம். மனிதர் யாவரும் சமம் என்ற கொள்கைக்கும் அவர்கட்கும் கடுகத்துணைகூடத் தொடர்பு இல்லை. இந்நிலைமையில் அக்கட்சி பிராமணர் அல்லாதார் என்ற வகுப்பார்க்கோ மக்கள் சமத்துவத்துக்கோ உழைக்கும் கட்சி என்று யாராவது சொன்னால் அது எவ்வளவு ஏமாற்று! பிராமணரல்லாதார் என்று வகுப்புப் பெயரால் பிரித்துக்கூறும் பதங்களையே நாம் விரும்பவில்லை. அது ஒரு புறமிருக்கட்டும். திருவாளர் இராமசாமி முதலியாரும் சர் ஷண்முகனாரும் தோற்றார் என்றால் அது பிராமணரல்லாதாரின் தோல்வி என்று ஏன் சொல்லுதல் வேண்டும்? அக்கூற்று மிகவும் ஒழுங்குத் தவறானது. அவர்கள் கூறும் பிராமணரல்லாதார் என்போரில் மிகப் பலர் அவர்கட்கு விரோதமாக இருந்தமையினாலேயே அவர்கள் தோற்றனர். கடமையைப் பலர் சரியாகச் செய்தார். தோற்க வேண்டியவர் தோற்றார். வெல்ல வேண்டியவர் வென்றார். நடக்க வேண்டுவது நடந்தது. தங்கள் தீமைக்கெல்லாம் அல்லாதார்ப் பெயரைச் சூடி எல்லோரையும் உடன்படுத்த நினைப்பது தவறு. அது நடவாத காரியம்.

ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த ஒரு அன்பர் இவ்வாரம் நமக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கின்றார். அக் கடிதமே இக்கட்டுரையை எழுதத் தூண்டியது. அவர் ஜஸ்டிஸ்க் கட்சியை நாம் அடிக்கடி தொடர்ந்து தாக்கி வருவதாகவும் பிராமணரல்லாதாரால் நடத்தப்பட்டுவரும் "ஊழியன்" அப்படிச் செய்வதற்கு வருந்துவதாகவும் குறித்திருக்கின்றார். அல்லாதார் என்ற காரணத்திற்காக அக்கட்சியை ஆதரிக்க முடியாதென்பதற்கும் தேச விடுதலையை நாடும் எவரும் அக்கட்சியைத் தாக்கித் தீரவேண்டிய கடப்பாடுடையார் என்பதற்கும் மேலே கூறியவை போதும் என நினைக்கின்றோம்.

அந் நண்பர் கடிதத்திலுள்ள ஒரே ஒரு ரசமான பகுதியை இங்கு குறிப்பிடுதல் அவசியம். "பிராமணப் பத்திரிகைகள் எவ்வளவோ இழிவான காரியங்களைச் செய்த போதினும் பிராமணர்களைக் கண்டிப்பதில்லை; நீங்கள் பிராமணர் அல்லாத ஜஸ்டிஸ்க் கட்சித் தலைவர்களைத் தூற்றுவது நியாயமா?" என்று அவர் கேட்கிறார். அவர் கூறுகின்றபடி பிராமணப் பத்திரிகைகள் என்பன செய்கின்றன என வைத்துக் கொள்வோம். நாம் அவற்றைப் பின்பற்ற வேண்டிய அவசியம் என்ன? ஒருவர் தப்பிதம் செய்தால் அதை மேற்கோளாகக் கொண்டு மற்றையோரும் பின்பற்றிவிட வேண்டுமா?

நமக்கும், பிராமணர்–அல்லாதார் என்ற சச்சரவுக்கும் தொடர்பு கிடையாது. யார் தவறு செய்தாலும் அவர் "ஊழியன்" கண்டனத்துக்கு உரியவரே. தேச விடுதலையும் மனித சமத்துவமுமே "ஊழிய"னின் உயிர்க் கொள்கைகள். பிராமணர் என்போர் ஆயினும் சரி, அல்லாதார் என்போர் என்றாலும் சரி, எவர் நாட்டு விடுதலைக்குத் துரோகியோ அவர் "ஊழியன்" தாக்குதலைப் பெற்றே தீர்வார். அதில் ஜஸ்டிஸ்க்கட்சி முன்னணியில் நிற்குமானால் தாக்காது என் செய்ய முடியும்?




இந்த வாரம் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி M. L. C. மைலாப்பூர் ரானடே மண்டபத்தில் சுதேசிக் காட்சியைத் திறந்து வைத்தார். ஏராளமானவர் விஜயம் செய்திருந்தனர். அப்போது இந்த "குரூப்" எடுக்கப்பட்டது. —P. P. B



# இடி முழக்கம்

## ஓடுபவனைக் கண்டால்?

ஓடுபவனைக் கண்டால் துரத்துபவனுக்கு கொண்டாட்டம் என்பது பழமொழி; அதனை அனுபவ வாயிலாக பார்க்கிறோம் இன்று சீனாவில். ஜப்பானியர் சீனா மீது சட்டென்று சீறி விழுந்து இரண்டு மூன்று வாரங்கள்கூட கழியவில்லை. அதற்குள் அவர்கள் மீண்டும் துரத்தத் தொடங்கிவிட்டார்கள். ஒரு சீன பத்திரிகை ஜப்பான் சக்ரவர்த்தியைப் பற்றி அவதூறாக எழுதியதாம். அதற்கு ஜப்பான் சில புதிய கோரிக்கைகளைச் சீன சர்க்காரிடம் கேட்டிருக்கிறது. ஷாங்காய் முனிசிபல் டைரெக்டரை நீக்கிவிட வேண்டுமென்றும், குவோமிண்டாங் தலைமைக் காரியாலயத்தைக் கலைத்துவிட வேண்டுமென்றும், நீல நிறச் சட்டைப் படை, சீன பாஸிஸ்ட் கட்சி ஆகியவற்றைக் கலைத்துவிட வேண்டும் என்றுமுள்ள நிபந்தனைகளே மேற்படி கோரிக்கைகள். இவற்றை எழுதி ஜப்பான் ஸ்தானீகர் சீன அன்னிய நாட்டு மந்திரியிடம் சமர்ப்பித்திருக்கிறார். ஒரு பத்திரிகை தம் சொந்த ஹோதாவில் எதுவோ எழுதிவிட்டதென்றால் தேசம் முழுதுக்குமா தண்டனை? ஜப்பான் திமிருக்கு இதைவிட என்ன எடுத்துக்காட்ட வேண்டும்? எந்த சுயமரியாதையுள்ள அரசாங்கமாவது ஒப்புக் கொள்ளுமா? அப்படியிருந்தும் சீன அதிகாரிகள் அவதூறாக எழுதிய பத்திரிகையை நிறுத்தி அதன் ஆசிரியரையும் கட்டுரை வரைந்தவரையும் தண்டிப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். என்ன சொன்னாலும் சீனா கேட்கும் என்பது தெரியும் ஜப்பானுக்கு; ஆதலால் இயன்ற மட்டும் துரத்துகின்றது சீனாவை.

## மடமசோதா

யார் யாரோ பலப்பல சந்தர்ப்பங்களில் தானமாகக் கொடுத்த ஆஸ்திகளையெல்லாம் மடங்கள் என்பவற்றின் பேரால் சில குறிப்பிட்ட பேர்வழிகள் எவ்வித உழைப்புக்கு முள்ளாகாமல் உண்டு களித்து சமூக சோம்பேறிகளாயிருக்கின்ற நிலைமை நாகரிகம் முதிர்ந்த இந்தக் காலத்திற்கு ஏற்றதல்ல என்பது விவாதமற்ற விஷயம். மத வளர்ச்சிக்கென்றும் நல்லொழுக்கத்திற்கென்றும் கொடுக்கப்பட்ட பொருள் பொற்குடை பொன்னாசனம், யானை குதிரை முதலிய ஆடம்பரங்கட்கு செலவிடப் படுமென்றால் யார்தான் விவாதிக்க வருவார்கள்! வெளிநாடுகள் யாவும் இத்தகைய பிரயோஜனமற்ற மடங்களையொழித்து இடங்களையும் சொத்துக்களையும் பறிமுதல் செய்து தேசத்திற்கு உபயோகப்படும் வழியில் சர்க்காருக்கு சொந்தமாக்கிக் கொள்வது வெள்ளிடைமலை. இத்தகைய காலம் நமது நாட்டிலும் வரப்போவது உறுதி. இது ஒருபால் கிடக்க; சென்னைச் சட்டசபை அங்கத்தினரான சுப்ரமணிய பட் என்பவர் மடமசோதா வென்ற ஒரு மசோதாவைக் கொண்டு வந்து மடங்களின் சொத்து சுகங்கட்கு சரியான கணக்கும் பரிபாலனமும் ஏற்பட வேண்டுமென்று கட்டுப்படுத்த நினைத்தார். இதனை வெளிநாட்டு முயற்சிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மலைக்கும் கடுகுக்குமுள்ள வித்தியாச மிருப்பதாகக் காண்போம். எனினும் பல இந்துக்கள் இம் மசோதாவை எதிர்த்து அது இந்து மதத்திற்குப் பாதகம் செய்வதாகுமென்று வாதாடினார்கள். கடைசியில் ஒரு தனிக் கமிட்டியின் பரிசீலனைக்கு விடுவதென்று சட்டசபை தீர்மானித்தது. இப்போது பலர் அக்கமிட்டியில் மசோதாபற்றி வாக்குமூலம் தெரிவித்திருப்பதோடு கமிட்டி மசோதாவைக் கைவிட வேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறது. மசோதா வொழியவேண்டுமென்ற வாக்குமூலம் கொடுத்தவர்களுள் முக்கியமான ஒருவர் சர் பத்ரோ ஆவர். இவர் ஜஸ்டிஸ் தலைவர்; மாஜி மந்திரி; பெரிய அந்தஸ்திலிருப்பவர். இவர் மசோதாவை ஒழிப்பதே உசிதமென்று கூறினாராம். ஜஸ்டிஸ் கட்சியின் ஜீவநாடியென்று சொல்லிக் கொள்கின்ற சு. ம. இயக்கத்தார் மடமசோதா நிறைவேற்றப்பட வேண்டுமென்கின்றார்கள் ஒரு பக்கம்; ஜஸ்டிஸ் தலைவர் மசோதா ஒழியவேண்டுமென்கின்றார் இன்னொரு பக்கம். இப்படியான பிறகும் சு. ம. கட்சி ஜஸ்டிஸின் கிளையென்று சொன்னால் என்ன அர்த்தம்?

## சிரம்பான் செட்டியார்கள் கல்வி நிலையம்

ஜூன் 30-ந் தேதி சிரம்பான் நாட்டுக்கோட்டை செட்டியார்களின் கல்வி நிலைய மாதக் கூட்டமொன்று திரு. உ. ராம. உமு. சுப. காசிவிஸ்வநாதன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

# எனது பர்மாப் பயணம்

## கடல் வாழ்வு

(ராய. சொ.)

இந்தத் தலைப்பைப் பார்த்தவுடன் பலர் பலவாறு நினைப்பார்கள். ஏன்? உலகத்தில் மனிதர் பலவிதம் அல்லவா? இப்போது சொந்தச் சரித்திரங்கள், சொந்த அநுபவங்கள், சொந்தப் பெருமைகள் எழுத முற்படுவோர் அதிகம். சில பெரியார்கள் தங்கள் கதைகளை உள்ளவாறு தாங்களே எழுதுவதால் உலகத்துக்குப் பயன் உண்டு எனக் கருதி எழுதுகிறார்கள். வேறு சில பெரியார்க ளென்போர் வேறு யாருக்கேனும் ஒரு பிரயோஜனமும் இல்லாவிட்டாலும் தங்கட்காவது இலாபம் உண்டென நினைத்துத் தாங்களாகவோ அல்லது மற்றவர்கள் பெயராலோ எழுதிக் கொள்கிறார்கள். மேற் சொல்லியவை யெல்லாம் பெரியோர்கள் சம்பந்தமானவை. எனக்கு அந்தப் பெரியவர்களுள் எவர் வரிசையிலும் இடமில்லை. எனது பர்மாப் பயணத்தில் அன்பர்கள் அறிந்து கொள்ள வேண்டியவை எனக் கருதுவனவற்றை இத்தலைப்பில் தொடர்ந்து நான் எழுதுவேன். படிப்போர் கருத்துப்படி கட்டுரை தகுதி கருதி மதிக்கப் பெறட்டும் என்று நான் சொல்ல வேண்டுவதில்லை.

இந்த மார்ச் இருபத்திரண்டாம் நாள் வெள்ளிக்கிழமை முற்பகல் சென்னையில் கப்பலேறினேன். நான் ஏறிய கப்பலின் பெயர் "ஏதோப்பியா". என்னுடன்கூட என் மனைவியும் மைந்தனும் வந்தனர். இதனால் அக்கப்பலில் வேறு யாரும் வரவில்லையென்று ஏற்படாது. கப்பலில் எத்துணையோ பேர் இருந்தனர். சிலர் கணக்கிட்டுக் கப்பலில் சென்றோர் இத்துணை பேர் என்று எழுதுகின்றனர். நான் ஆட்களை எண்ணிப் பார்க்கவில்லை. அதற்குரிய அதிகாரிகளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவுமில்லை. அது போகட்டும். கப்பல் பத்தரை மணிக்குக் கரையில் நிற்பவர்களைப் பார்த்துத் தனது உருவத்துக் கேற்ற பெரிய தொனியில் ஒரு கனைப்புக் கனைத்துச் சொல்லிக்கொண்டு விடைபெற்றுக் கடலைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டு விட்டது. வெள்ளிக்கிழமை புறப்பட்ட அந்த நாவாய், சுமார் எழுபத்திரண்டு மணி நேரங்கள் ஒரு நிமிடமும் ஓய்வில்லாமல் அந்தப் பெரிய கருங்கடலில் நீந்தி இரங்கூன் போய்த்தான் நின்றது. கடலென்னும் கரிய அரக்கன், "உனக்கு இவ்வளவா? என்மீது சவாரி செய்கின்றாயா?" என்று ஓவென அலறிக்கொண்டு தனது வெள்ளிய எண்ணற்ற கைகளாகிய அலைகளினால் 'படார்! படார்!' எனக் கொடுத்த அறைகளை யெல்லாம் அந்த மரக்கலம் ஏற்றும் தனது நீச்சுத் தொழிலையும் குறிக்கோளையும் விட்டிலது. அதோடு அவ் எளிய வங்கம் ஏராளமான மக்கள், மாக்கள் வேறு பல பொருள்களை யெல்லாம் மெய் வருந்தச் சுமந்து இவ்வளவு துன்பத்தோடு சென்றது பரிதாபகரமானதேயன்றோ? இராப் பகலாக இடையீடின்றி உழைப்பதாகச் சிலர் பெருமை பேசிக் கொள்கின்றார்க ளல்லவா? அவர்களெல்லாம் இந்தக் கப்பலை நோக்க எம்மாத்திரம்?



இவ்வளவு பெருமை வாய்ந்த கப்பலில்—அக்கப்பலோடு போராடிய கருங்கடலில் எங்கட்கு நான்கு நாள்—சரியாகக் கணக்குப் பார்த்தால் முழு மூன்றுநாள் வாழ்வு. கப்பல் வாழ்வு—அல்லது கடல் வாழ்வு என்பது கப்பலுக்கும் கடலுக்கும் நடக்கும் போர் மட்டும் கடுமையாக இல்லாதிருந்தால் நல்ல இன்பகரமான வாழ்வு என்றே சொல்லுதல் வேண்டும். எங்கள் இரங்கூன் பயணக் கடல்வாழ்வு இன்ப வாழ்வாகவே அமைந்திருந்தது. நாங்கள் திரும்புங்கால் கொஞ்சம் நிலைமை வேறு. சென்றபொழுது காலம் கடல் வாழ்வுக் கேற்றதாக இருந்தது. முழு மூன்று நாட்கள் கடலில் ஆனந்தமாகக் காலங் கழித்தோம். சாட்சாத் விஷ்ணு மூர்த்தி கடலைத் தனது இன்ப வாழ்க்கைக்கு உறைவிடமாகக் கொண்டான் என்று பழய பெரியவர்கள் கூறுகின்றார்கள். அப்படி யிருந்தால் அவன் அநுபவசாலிதான். ஆனால் அத் திருமால் வாழ்ந்தது பாற்கடலிலாம்! அக் கடல் கண்ணுக்குத் தெரியும் எந்த உலகத்தினும் இப்போது இருப்பதாகத் தெரியவில்லை. ஒருகால் இங்கிருந்து கொண்டுபோன மற்றைப் பொருள்களோடு சேர்த்து அந்தத் திவ்யமான பாற்கடலையும் மேற்கு நாட்டார் கொண்டுபோய் எங்காவது மறைத்து விட்டார்களோ, என்னவோ! அன்றி இக் கலிகாலத்துப் பாவிகள் முன் நாம் இருத்தல் தகாதென அப்பாற்கடல் மாயமாகத்தான் மறைந்து விட்டதோ! தெரியவில்லை.

இன்று நமது உலகில் இருப்பது உப்புக் கடல் ஒன்றே ஒன்றுதான். நாங்கள் மூன்று நாட்கள் உப்புக் கடலிலேயே வாழ்ந்தோம். ஸ்ரீமந் நாராயணனைப்போல் பாற்கடலிற் கிடந்து வேண்டும் பொழுதெல்லாம் அக்கடற் பாலை அள்ளிக் குடித்து மகிழும் பாக்கியம் எங்கட்குக் கிடைக்கவில்லை. ஆனால் உப்புக் கடலில் வாழ்ந்தமையால் உப்பு நீரைக் குடித்தோம் என்று கருதி விடாதீர்கள். எங்கட்கும் அந்த காப்புக் கடவுளுக்கும் கடல் வாழ்க்கையில் வேறொரு பெரிய மாற்றமுண்டு. ஸ்ரீதரன் கடல் வாழ்வுக்கு மிதப்புக் கருவியாகக் கொண்டபொருள் ஒரு நாகப் பாம்பு! எங்களுடையது பல ஆயிரம் டன் நிறைகொண்ட ஒரு பெரிய கப்பல். அந்தப் பாம்பு இந்தக் கப்பலும் இதுபோன்ற எண்ணற்ற வங்கங்களும் செல்வதற்கு இடமாக இருக்கும் பெரிய கடலையும் அக்கடல் சூழ்ந்த உலகம் முழுமையையும் சுமக்கக்கூடிய அவ்வளவு பெரியது என்று பக்த கோடிகள் பகரா நிற்கும். 'அந்தப் பெரிய பாம்புதான் தாங்கிய பூமியைத் 'தொப்' என்று போட்டுவிட்டு, தன்னை நோக்க மிகச் சிறியதான கடல் என்ற ஒன்றுக்குள் எவ்வாறு நுழைந்தது' என்றெல்லாம் கேட்காதீர்கள். நாராயணன் கடவுள்! அவன் எதுவும் செய்ய வல்லான்! அவன் அரிய கடல் வாழ்வையும் நம்போன்ற சாதாரணமானவர் கடல் வாழ்வையும் ஒப்பிட்டுப் பார்க்கலாமா? கடல் வாழ்வு என்றவுடன் திருமால் நினைவு வந்து விட்டதாதலால் எனது பர்மாப் பயணக் கட்டுரையில் கொஞ்சம் அது இடம் பெற்று விட்டது. போகட்டும்.

நான் எனது துணைவர்களுடன் கடல் வாழ்வை மகிழ்ச்சியாகப் போக்கினேன். நடுக்கடலுள் கப்பல் செல்லுங்கால் மனத்தைப் பெரிதும் இன்புறுத்தும் இயற்கைக் காட்சியைத் தவிர வேறு எதையும் காண முடியாது. அண்ணாந்து நோக்கினால் உச்சியில் வானம். குனிந்து பார்த்தால் கீழே கடல். சுற்றிலும் எவ்வளவு தூரம் கண்ணைச் செலுத்தினாலும் வானவெளியையும் கடல் நீரையும் தாங்கள் செல்லும் கப்பலையும் தவிர வேறு எப்பொருளையும் காணவியலா. இராக்காலத்தில் விண் மீன்கள் மேலே ஒளி விட்டுக் கொண்டிருக்கும். சந்திரன் தனது அழகிய வெள்ளிய தண்ணமுதத்தை அள்ளி வீசிக் கருங் கடலைப் பாற்கடல் போல் ஒளிவிடச் செய்வான். கடல் நடுவில் வீசும் அசுத்தம் என்பதே சிறிதும் கலவாத அப்புனிதமான காற்றை வேறு எங்கும் பெற முடியாது. தன்மை இப்படியானால் அதை உணரவல்லார்க்குக் கடல் வாழ்வு அடங்கா இன்பம் நல்கவல்ல தென்பதில் என்னே தடை? கடல் வாழ்வு எனக்கு இப்போது புதிதல்ல. எனது பதினோராவது வயதிலேயே எனக்கு கடற் பழக்கமுண்டு. முதல் முறையாகக் கடற் பயணஞ் செய்த எனது மனைவியும் சந்தோஷமாகவே பிரயாணத்தை நடத்தினார். சிறப்பாக ஆறு வயதே நிரம்பிய எங்கள் சிறுவன் கடல் வாழ்வை மிகக் குதூகலமாக ஓடி ஆடி விளையாடிச் செலுத்தினான் என்பது குறிப்பிடத் தக்கது. நாங்கள் ஆனந்தமாக மார்ச் இருபத்தைந்தாம் நாள் திங்கட்கிழமை பகல் பதினொன்றரை மணிக்கு இரங்கூன் துறையில் இறங்கி அன்பர் குழாத்தோடு உறவாடி அளவளாவி மகிழ்ந்தோம்.

2



# "கோழைத்தனமல்ல அஹிம்ஸை"

காந்திஜீ திருவாய் மலர்ந்தருளுகிறார்

ஆந்திர தேசத்திலுள்ள ஓர் கிராமத்தில் ஹிந்து-முஸ்லீம் மாச்சரியம் வளர்ந்து கிடந்து நிற்பதையும், அக்கிராமத்திலுள்ள முஸ்லீம்கள் வேண்டுமென்றே ஹிந்துக்களுக்குத் துன்ப மிழைத்து வருவதையும் எடுத்துக் காட்டும் முறையில் ஒரு பிரபல காங்கிரஸ் வாதி மகாத்மா காந்திக்கு ஒரு கடிதமெழுதியிருந்தார். இந்நிலையில் ஜனங்கள் என்ன செய்வதெனத் தெரிவிக்குமாறு அவர் காந்திஜியைக் கேட்டிருந்தார்.

இதற்கு மகாத்மாஜி அனுப்பியுள்ள பதில் கடிதத்தின் விவரம் வருமாறு:—

"தாங்கள் எடுத்துக் காட்டியுள்ள நிலைமை வருந்தத் தக்கதாகும். ஜனங்கள் தங்கள் முஸ்லீம் சகோதரர்களைக் கண்டு அச்சம் கொள்வாராயின் பலாத்காரப் பிரயோகத்தின் மூலம் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அவர்களுக்குப் பூர்ண உரிமையுண்டு. அவ்வாறு செய்யா திருப்பது பயங்கொள்ளித்தனமாகும். இந்த பயங்கொள்ளித்தனம் ஒரு பொழுதும் அஹிம்ஸா தர்மமாகாது. பயங் கொள்ளித்தன மென்பது பலாத்கார வர்க்கத்தைச் சேர்ந்ததேயாகும். அது பகிரங்கமான, ஆயுதங்களுடன் கூடிய பலாத்காரத்தைவிட மோசமானது.

தங்கள் உண்மையுள்ள,
எம். கே. காந்தி."

# 220 அடி கோபுரம்

காசியில் புதிய சிவாலயம்

இந்தியாவிலுள்ள எல்லா ஹிந்து கோயில் கோபுரங்களையும் விட தஞ்சை பிரகதீச்வரர் ஆலய புராதன கோபுரமே மிகவும் உயரமானது. அதைவிட உயர்ந்த கோபுரத்துடன் ஓர் சிவாலயத்தை காசியில் கட்ட பண்டித மதன் மோகன மாளவியா முயன்று வருகிறார். இந்திய புராதன சிற்ப சாஸ்திரத்தை புனருத்தாரணம் செய்வதற்காகவே தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்துள்ள ஸ்ரீ. சந்திர சட்டர்ஜி இது சம்பந்தமான வேலையை கவனித்து வருகிறார். ரூ. 20 லக்ஷம் செலவில், ஹிந்து சாஸ்திர விதிப்படி ஹிந்து சர்வகலாசாலை பிரதேசத்தில் 220 அடி உயரமுள்ள உன்னதமான கோபுரத்துடன் சிவாலயம் கட்ட தீவிர ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

# பொட்டுப் பொடி

"வெட்டுக்கிளி"

காங்கிரசை

முறியடித்து விட்டு தாங்கள் தமிழ் நாட்டின் மீது ஏறி உட்கார்ந்து கொள்ள வேண்டுமென்று பகீரதப் பிரயத்தனம் செய்கிறார்கள். ஜஸ்டிஸ் தலைவர்கள்! ஆங்காங்கே காங்கிரஸ் படுத்துவிட்டது என்றும் தாங்கள் எழுந்து முகங் கழுவிவிட்டார்களென்றும் வாசா மகோசரமாகப் பேசவும் செய்கிறார்கள். ஆனால் நடைமுறையில் அப்படி யொன்றும் நிகழ்வதாகத் தெரியவில்லை. காங்கிரஸ் சகடம் நோக்கச் சென்று கொண்டே இருக்கிறது. ஆங்காங்கு ஆராதனைகள் நடைபெறுகின்றன; பந்தர்கள் பூசனை செய்கின்றார்கள்; காங்கிரஸும் எங்கும் புன்னகைப் பூமுறுவலைக் காண்பிக்கின்றது.

போனவாரம்

கட்டுரை வரையும் வெட்டுக் கிளிக்குக் கிடைத்த செய்தியால் சுமார் 13 தமிழ் ஜில்லாக்களில் மட்டிலுமே 50 ஆயிரத்திற்கு மேல் காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்ந்து விட்டதாகவும் இன்னும் சேர்ந்து கொண்டிருப்பதாகவும் தெரிகிறது. இதர ஜில்லாக்கள் தத்தம் அறிக்கைகளை சீக்கிரத்தில் வெளிவிடக் கூடும். அப்படி எல்லா அறிக்கைகளும் வந்து விட்டால் சுமார் 70 ஆயிரம் 60 ஆயிரம் மெம்பர்கட்கு வந்து விடலாம். இதனைப் பார்த்த பின்னும் ஜஸ்டிஸ்காரர்கள் வாய் வீச்சுவீசுவார்களா?

திவான்பகதூர்

எஸ். குமாரசாமி ரெட்டியார் தெரிந்தோ தெரியாமலோ 'காங்கிரஸ்காரர்கட்கு ஆக்க வேலை எதுவும் செய்யத் தெரியாது'' என்று கூறி விட்டார். அவ்வளவுதான்! அம்மம்ம! எத்தனை பதில், எத்தனை கடா, எத்தனை பாராட்டுகள் அவருக்குக் கிடைத்தன! 'ந்யூ ஒரிசா' என்ற ஒரு பத்திரிகை போனவாரம் கனம் ரெட்டியாரிடம் பலப்பல கேள்விகளைக் கேட்டு திணற அடித்திருக்கிறது. அக்கேள்விகளாவன :—

(1) நாடு முழுதும் பரந்து கிடக்கும் ஒரு கூட்டுறவை ஏற்படுத்தி மிகச் சிறிய குக்கிராமத்திலும்கூட கமிட்டிகளும் சபைகளும் அமைத்து ஒழுங்கையும், தொண்டாற்றும் திறத்தையும் வளர்த்திருக்கும் காங்கிரசின் செயல் ஒரு ஆக்க வேலையல்லவா?

(2) லக்ஷக் கணக்கான அங்கத்தினர்களைச் சேர்த்து மாபெரும் சபையாக அமைத்திருப்பது ஒரு ஆக்க வேலையல்லவா?



ஜூலை 5-ந்தேதி பம்பாயில் குவெட்டா தினத்தை முன்னிட்டு ஏராளமான தேச சேவிகைகளும் தொண்டர்களும் நகர் முழுதும் சென்று பணம் வசூலித்தார்கள். இப்படம் அப்துல் ரஹிமான் தெருவில் மிஸ். சோபியா சோம்ஜியும் மற்றொருவரும் உண்டியல் வசூலிக்கும்போது எடுக்கப்பட்டது. —Cou.

(3) நாட்டில் சிறந்த தேசிய உணர்ச்சியை எழுப்பி, தியாக புத்தியை வளர்த்து, தேசாபிமானத்தை யூட்டி, எந்தத் துன்பத்தையும் ஏற்றுக் கொள்ளும் மனோதிடத்தை உண்டு பண்ணி யிருப்பதைவிட சிறந்த ஆக்க வேலையுண்டா?

பாவம் இதற்கெல்லாம் என்ன சொல்வார் இன்று அவர் மந்திரியாயிருப்பதும் பொதுக்கூட்டம் போட்டால் ஏதோ சிலர் வந்து கூடுவதும்கூட காங்கிரசின் ஆக்க வேலைதான். எலக்ஷன் வருகிறதென்று தெரிந்ததும் ஊர் ஊராய் குய்யோ முறையோவென்று மந்திரிகள் சத்தம் போடுவதற்கும் காங்கிரஸ் ஆக்க வேலையே காரணம். ஜஸ்டிஸ் கட்சிக்குத் தொண்டர்களென்ற ஒரு வாயாடி கோஷ்டியாரை வளர்த்து விட்டது காங்கிரஸ் ஆக்க வேலை தான். "என்ன வந்தாலும் நாங்கள் சொன்னதைத்தான் சொல்வோம்; சர்க்கார் அடக்கு முறைக்கு பயப்படமாட்டோம்'' என்று கனம் மந்திரியின் தொண்டர்கள் வீறுப்போடு கூறுவதற்கு காங்கிரஸ் ஆக்க வேலைதான் காரணம். ஒருநாள் சர் ஷண்முகம் பேசிய போது 'நான் தமிழ்ப்பேச பழகியிருப்பதற்கு சுயராஜ்யக் கக்ஷியில் சேர்ந்திருந்ததே காரணம்'' என்று கடற்கரையில் முழங்கி, திவான்பகதூர் ராமசாமிமுதலியாரை ஒரு நாளாவது சுயராஜ்யக் கட்சியில் சேர்ந்து தமிழ்பேசக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்தார். இதிலிருந்து காங்கிரசின் ஆக்க வேலை தெரியவில்லையா கனம் ரெட்டியாருக்கு? அதிகமாக வெட்டுக்கிளி எழுத விரும்பவில்லை. ந்யூ ஒரிசா கூறியமாதிரி ரெட்டியார் அறிவிற்காக கிளி வருந்துகிறது.

தாம் ஆளும் தேசத்தின்

இயல்பையே அறியாது அரசாட்சி புரிவதில் மகா சமர்த்தர் ஆங்கிலேயர். இதற்கு நாம் எத்தனையோ கோடிக் கணக்கான உதாரணங்களை இன்று வரையிலும் பார்த்தோம்; கேள்விப்பட்டோம்; என்பதோடு இன்னும் நம் பார்வைக்கு வந்துகொண்டு மிருக்கின்றன. சமீபத்தில் இந்தியா மந்திரியாக ஞானஸ்நானம் பெற்ற ஜெத்லந்து பிரபுவுக்கு பாடலீபுரம் B. N. கல்லூரி பண்டிதரான B. B. மஜூம்தார் 'அரசியல் சிந்தனை வரலாறு' என்ற தம் புதிய புத்தகத்தை அனுப்பிக் கொடுத்தார். என்ன உறவினால் மஜூம்தார் புஸ்தகம் அனுப்பினாரோ; அது வெட்டுக்கிளிக்குத் தெரியாது. அந்த புத்தகத்தை ஐயா ஜத்லாந்து பிரபு பார்த்து விட்டு, திரு.



மஜூம்தாருக்கு ஒரு பாராட்டுக் கடிதமெழுதினர். அக் கடிதத்தில் "நான் வந்தே மாதரம் என்ற கீதம் பங்கிம சந்த்ர சதோபாத்யாயரினால்தான் நிர்மிக்கப்பட்டு ஆநந்த மடம் என்ற நாவலில் பிரசுரம் செய்யப்பட்டது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். தங்கள் புத்தகத்திலிருந்து அதற்கு முந்திய காலந்தொட்டே அக்கீதம் இருந்து வருகிறதென்பது விளங்குகிறது'' என்று குறிப்பிட்டார். இந்திய மக்களின் உயிர்நாடி மந்திரமாகிய வந்தே மாதரத்தைப் பற்றி—எந்தப் பதங்கட்காக ஒரு காலத்தில் ஆங்கிலேயர் குடையைக் கண்ட நாட்டுப்புறத்து மிருகம் மாதிரி சீறி விழுந்தார்களோ அந்த சக்திச் சொற்களைப் பற்றி—அன்றும் இன்றும் என்றும் தேசக் கிளர்ச்சியின் ஆருயிராயிருக்கும் செஞ் சொற்றொடரைப்பற்றி இந்திய அதிகாரியாகிய ஒருவர்-விசேஷமாகவும் 20 வருடம் அப்பதம் வளர்ந்து கிளர்ந்த பூமியாகிய வங்காளத்தில் கவர்னராக விருந்தவர்—தெரிந்திருக்கவில்லையானால் வேறு எதைத்தான் அறிந்து இந்தியரை ஆளப்போகிறார்கள்?

இந்தியர்களின்

நன்மைக்கான ஒரு காரியத்தில் சர்க்கார் உபேக்ஷையாக இருந்து விட்டார்களென்றால் அதற்காக நம் புத்திக்குப் பூசை போட்டுக் கொள்ளுவது தான் முறையே தவிர, சர்க்காரையும் இங்கிலாந்தையும் நொந்து கொள்வது தகுதியல்ல. இந்த முடிவு ஏற்பட்ட பிறகு தான் சுயராஜ்யப் போராட்டத்தை ஆரம்பித்தோம். தேசத்திற்கு என்னென்ன நன்மை வேண்டுமோ அத்தனையையும் சுயராஜ்யம் வந்தால் தான் செய்து கொள்ள முடியும். இதனை வேறு பாஷையில் சொல்வதானால் இந்தியாவின் முன்னேற்ற மருந்து விடுதலை யொன்றே தான். ஸ்ரீமதி ஸ்ரீ வல்தவா என்ற சட்டசபை அங்கத்தினர் ஐக்கிய மாகாண சட்ட சபையில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். வருடந் தோறும் 5000 ரூபாய் விகிதம் கொடுத்து வந்தால் வீழ்ந்து பட்ட சகோதரிகட்கு ஒரு ரக்ஷா நிலயம் கட்ட முடியுமென்பதும் அதன் வழியாக நாட்டில் விபசாரத்தை தடை செய்து விட முயலலாமென்பதும், மேற்படி தீர்மானத்தின் கருத்து. இது உண்மையில் அவசியமான தீர்மானம் என்பதோடு எந்த மாகாணமும் அவசியம் ஏற்றுக் கொள்ள வேண்டுவதுமாகும். ஆனால் ஐக்கிய மாகாண ஹோம் மெம்பர் தம் பெருமதியால் அத் தீர்மானம் தவறானதென்றோ தகுதியற்றதென்றோ கண்டு பிடித்து, நிராகரித்து விட்டார். ஒரு கால் அவருக்கு இந்திய பெண்கள் கறையற்றிருக்க வேண்டாமென்ற எண்ணமிருக்கலாம்; அல்லது விபசாரிகளை யொழித்தால் இந்து தெய்வங்கள் கோபங் கொண்டு விடுமென்ற இந்து சனாதன தர்மசாஸ்திர ஞான பயமிருக்கலாம். இதைத் தவிர ஒரு பெரிய மாகாணம் வருடத்திற்கு 5000 ரூபாய் கொடுப்பது ஏலாதகாரியமென்று எண்ணி மறுத்திருப்பாரா?

மதத்தின் பேரால்

பார்ப்பனர்கள் ஹரிஜனர்களுள்பட எல்லா இந்துக்களையும் கொள்ளையடிக்கிறார்கள் என்று தொழிலாளர் அநுதாபிகளாகிய சு. ம. கார்களும் அதே போல ஜமீந்தார்களும் முதலாளிகளும் நிறைந்த ஜஸ்டிஸ் உத்யோகக் கும்பலும் குறைகூறி வருகிறார்கள். ஆனால் பிக்கானீரில் எந்தப் பேரினாலுமில்லாது, வெறும் திருட்டின் பேரால், இருபார்ப்பனர்கள் ஒரு ஹரிஜனச் சிறுவனை கொள்ளை யடித்திருப்பதாய் செய்தி கிடைக்கிறது. என்ன ஆச்சரியம்! வேதமோதுவதிலும் கடவுளை நோக்கி இயங்குவதிலும் ஈடுபட்டிருக்க வேண்டிய பிராமணர்கள் திருடுவதில் இறங்கி விட்டார்களே! திருட்டிலும் மகா நீசமான ஜாதியென்று பிராமணர்களே மதிக்கின்ற ஹரிஜனனிடமா திருட வேண்டும்? எவ்வளவு தூரம் காலம் மாறிப் போயிருக்கிறது!

பீக்கானீர்

போலீஸ்காரர்கட்கு கிடைத்த ரிப்போர்ட்டின்படி இரண்டு பார்ப்பனர்களும் ஒரு ஆதிதிராவிட வாலிபனை உற்சாகமாக சார்சிசார் என்ற இடத்திற்குப் போய்வரலாமென்று அழைத்தார்களென்றும், அந்த விடத்திற்குச் சென்றதும் அவர்கள் ஏறிப்போன வண்டியின் சொந்தக்காரனை போகச் சொல்லிவிட்டு ஒரு ஆலயத்திற்குள் சிறுவனை இட்டுச் சென்று அவனிடமிருந்த நகைகள் பணமெல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டு கைகால்களை கட்டி ரயில் தண்டவாளத்தில் போட்டுவிட்டார்களென்றும் தெரிகிறது.

இந்த ரிப்போர்ட்டின்படி

பிராமணர்கள் இருவரும் எத்தனை குற்றங்கள் செய்திருக்கிறார்கள்! (1) திருட்டுக் குற்றம் (அது வேதசாரப் புரட்சியாம்) (2) ஏமாற்றி அழைத்துக் கொண்டு போன குற்றம் (ஒழுக்கப் பிசகு) (3) ஆலயத்திற்குள் ஹரிஜனனை இட்டுச் சென்ற குற்றம் (சனாதனத்துக்கு எதிர்) (4) அவனை தொட்டதும் அவனோடு உறவாடியதுமாகிய குற்றம் (சமூக ஆசார மறுப்பு) (5) கயிற்றினால் கட்டிய குற்றம் (தேகோபத்திரவம்) (6) தண்டவாளத்தில் போட்டது (கொலை முயற்சி) (7) அரிஜனனை தூக்கி சுமந்த குற்றம் (கால வேற்றுமை) இத்தனை குற்றங்களையும் செய்த இரு பார்ப்பனர்கள் இணங்கிவிட்டார்கள் என்பது மன்னிக்க முடியாததல்லவா? மேலும் சாஸ்திரப்படி நெருங்கக்கூட செய்யலாகாது என்று ஒதுக்கி வைக்கப்பட்

டிருக்கும் ஆதிதிராவிடனை தூக்கி சுமப்பதென்றால் எவ்வளவு பெரிய குற்றம்! இப்படி நிகழ்ந்த பிறகு தெருவில்கூட அரிஜனர்களை நடக்கவிடலாகாது என்று சொல்லும் சனாதனிகள் என்ன செய்யப் போகிறார்கள்?

பூரி சங்கராசாரியார்

சமீபத்தில் மகா பெரிய காரியமொன்றை சாதித்துவிட்டார். பண்டைய இந்து இதிகாச புராணங்களின்படி இந்தியர்கள் இந்தியாவையே உலகம் என்று நினைத்திருந்தார்கள் என்று ஏற்படுகிறது. அந்த நிலையில் அர்ஜுனன் உலகம் முழுவதையும் வென்று விட்டானென்றால் பெரிய காரியத்தை சாதித்துவிட்டானென்று கூறிவிடவோ, அல்லது அர்ஜுனனது வீரம் ஆங்கிலேயர்களின் வீரத்தைவிட மேற்பட்டதென்றோ கூறிவிடமுடியாது. ஆனால் பூரி ஆசாரியார் உலகமென்பது இந்தியா மட்டிலுமல்லவென்றும் பண்டையோர்கட்கும் அது தெரியும் என்றும், அர்ஜுனன் அமெரிக்காவைக் கூட ஜயித்திருக்கின்றானென்றும் தமது 'கல்யாண கல்பதரு'வில் எழுதியிருக்கிறார். அவரது கூற்றுக்கு மெக்ஸிகோவில் லக்ஷியங்கள் இருக்கின்றனவாம். அம்மம்மா! எவ்வளவு பெரிய ஆராய்ச்சியைச் செய்துவிட்டார் சங்கராசாரியார்! இவருக்கு ஏன் ஒரு பெரிய நோபல் பரிசை கொடுக்கக்கூடாது? திரு. சங்கராசாரியார் ஆராய்ச்சிப்படி "உலகில்" 56 தேசங்கட்கு மேற்பட்டு மிருக்கும் போலிருக்கிறதே.

---

மாஞ்செடி கொடிகளுக்கு மின்சார உஷ்ணத்தைக் கொடுத்து அவைகளை செழிப்பாக வளர்க்கும் முறையை ஒரு ஜெர்மன் ரசாயன நிபுணர் கண்டுபிடித்திருக்கிறார். உருளைக் கிழங்கு, சீமைத் தக்காளி முதலிய செடிகளுக்கு சுமார் ஒரு அடிக்குக் கீழ் பூமிக்குள் மின்சாரக் கம்பிகளைப் புதைத்து, அந்தக் கம்பிகளின் மூலம் மின்சார உஷ்ணம் கொடுக்க ஏற்பாடு செய்தார். மின்சார உஷ்ணம் பெற்ற உருளைக் கிழங்குச் செடியும், தக்காளி செடியும் செழிப்பாக வளர்ந்தன. ஏராளமான காய்களும் காய்த்தன.

## பார்வதி நகரில் கல் மழை

### கருங்கற்களைவிட வலியவை

திப்பாரா டிவிஷனைச் சேர்ந்த பார்வதி நகரிலும் அதற் கருகிலுள்ள கிராமங்களிலும் சென்ற வாரக் கடைசியில் கல் மழை பெய்தது. இரவில் கருங்கற்களை விடக் கனமான வஸ்துக்கள் வெவ்வேறு வகையான அளவுகள் கொண்டவைகளாய் ஆகாயத்திலிருந்து விழத் தொடங்கின. பூமியிலுள்ள கடினமான கற்களைவிட அவை வலியவையா யிருக்கின்றன. விழுந்த வேகத்தில் சில கற்கள் மணலில் புதைந்து கொண்டன. அவற்றை எடுக்க முடியவில்லை. சில கற்களை எடுத்து "ஆர்க்கியலாஜிக்கல்" இலாக்காவுக்கு அனுப்பி வைத்திருக்கின்றனர். இதர கிரஹங்களிலிருந்து அதிர்ச்சியால் இந்தக் கற்கள் விழுந்திருக்க வேண்டுமென்று சந்தேகிக்கப்படுகிறது.





# சென்னை மந்திரிகட்கு சிறந்த ஆப்புகள்

## சத்தியமூர்த்தியின் சாதுரியப் பதில்

திருநெல்வேலியில் சென்ற வாரம் திரு. சத்தியமூர்த்தி ஒரு கூட்டத்தில் பேசியபோது சென்னை மந்திரிகள் காங்கிரஸ் மீது வீணாகச் சுமத்தும் பழிக்குப் பதில் கூறினார். கூறும்போது மும்மந்திரிகள் பிரசங்கம் வெளியான பத்திரிகை கையிலிருந்தது. கூட்டம், ஆரம்பம் முதல் கடைசி வரை கவனமாய்க் கேட்டதோடு இடையிடையே நகைப்பை வெளியிட்டது. திரு. சத்தியமூர்த்தி பேசியதாவது :—

திரும்பத் திரும்ப சென்ற பல வருஷங்களாய்ச் சொன்ன சங்கதிகளைத்தான் மறுபடியும் சொல்ல விரும்புகிறேன். தேசம் நம்முடைய தேசம்; நாம் ஆளவேண்டும். அதற்கு நாம் காங்கிரஸை ஆதரிக்கவேண்டும். ஆதரித்தால் சுயராஜ்யமடைவோம். சுயராஜ்யம் வராமலிருப்பதற்கு முக்கியக் காரணம், நம்மவர்களுள் கோடரிக் காம்புகள்போல் சிலர் தேசத்தைக் காட்டிக் கொடுப்பதேயாகும். காங்கிரஸ் சர்க்காருடன் போராடி, தற்காலிகமாய், போராட்டத்தை நிறுத்தி யிருக்கிறது. இப்படி எவ்வளவோ தியாகங்கள் செய்து காங்கிரஸ் போராடி யிருக்கும் பொழுது, மந்திரிகள் மாதம் ரூ. 4000 சம்பளம் வாங்கிக்கொண்டு கூலிக்கு மாரடித்தாற்போல், காங்கிரஸை இழிவாய்ப் பேசினால் யார் இவர்களைக் கவனிக்கப் போகிறார்கள்? இவர்களுக்கு ஜனங்களிடையே என்ன செல்வாக்கு?

காங்கிரஸ் சபையை இவர்கள் சிசுபால ஜராசந்தர்கள் மாதிரி திட்டுவது நல்லதுதான். அவர்களுக்கு நேர்ந்த கதியே இவர்களுக்கும் நேரும். உண்மையாக ஜனங்களிடையே பிரசாரம் செய்ய வேண்டுமானால், மலை யுச்சியில் ஆங்கிலத்தில் செய்வானேன்? கீழே வந்து ஜனங்களுக்கிடையே சொல்ல வேண்டியதைச் சொல்லட்டுமே.

மந்திரிகள் நேற்று வந்தவர்கள்; நாளைப் போகிறவர்கள். நம் ஓட்டை வாங்கி மந்திரிகளாகி யிருக்கிறார்கள். ஆனால், காங்கிரஸ் மகா சபையோ என்றும் அழியாதது. ஸ்ரீ. பி. டி. ராஜன் சென்ற 6 வருஷங்களாக சென்னை சட்டசபையில் வாயையே திறக்கவில்லை.

3



கிழவி :—ஐயோ நான் என் செய்வேன்! என் மகன் எங்கு சென்றானோ! எந்த திசைக்கு போனானோ!

பக்கத்திலிருந்த பையன் திசைக் காட்டுங் கருவியை எடுத்துப் பார்த்துக் கொண்டு பொறுபாட்டி இந்தக் கருவியைப் பார்த்துக் திசையைக் கூறுகிறேன்.

சம்பளத்தை வாங்கினதைத் தவிர வேறு என்ன இவர்கள் செய்தார்கள்? இவர்கள் சென்னை சட்டசபையில் 4 உபத் தேர்தல்களிலும் கிட்ட வர முடியவில்லை. எல்லாம் காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கே ஜெயம். திருச்சியில், ஸ்ரீ. பி. ஆர். தேவருக்கு எதிராக போட்டியே போடவில்லை. காங்கிரஸ் பிரசாரம் செய்துகொண்டே தானிருக்கிறது. தேசம் சுயராஜ்யமடையும் வரை பிரசாரம் நடந்து கொண்டே தானிருக்கும்.

கூட்டத்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீ. ராஜன், "உருப்படும் கொள்கைகளை ஜனங்களிடம் அனுஷ்டித்திருந்தால், அதை ஆதரிக்க வேண்டியது தான்" என்று சொல்லி யிருக்கிறார். ஸ்ரீ. ராஜனைக் கேட்டா காங்கிரஸ் திட்டங்களைப் போட்டிருக்கிறது! ஜஸ்டிஸ் கக்ஷி கொள்கைகளென்ன? தங்கள் கொள்கைகளைப் பற்றி ஏதாவது சொல்லி யிருக்கிறார்களா? அவர்களுக்கு காங்கிரஸை நிந்தாஸ்துதிச் செய்வதே வேலையாய் விட்டது. மந்திரி ஸ்ரீ. ரெட்டியார், எந்தக் கக்ஷி ஜெயித்ததோ அதில் சேர்ந்துவிடுவார். உருப்படும் கொள்கைகளை ஜனங்களுக்குச் சொன்னால், ஜனங்களின் ஓட்டை பெற்று மந்திரி சபையை வகிப்பதில் ஆக்ஷேபனை யில்லையென்று மந்திரி சொல்லுகிறார். இவர் யார் ஆக்ஷேபிப்பதற்கு? காங்கிரஸ்காரர்கள் பித்தலாட்டமாய்ப் பேசியதாகச் சொல்லுவது வாக்காளரா ஜஸ்டிஸ் கக்ஷியார் இழிவாகச் சொன்னதாகும்.

15 வருஷமாய் சென்னையில் ஜஸ்டிஸ் கக்ஷியார் ஆண்டதின் பலனென்ன? வாக்காளர்கள் தேர்தலில் ஸ்ரீ. ராமஸ்வாமி முதலியாருக்கு ஓட் கொடுக்காமல், எனக்கே வோட்டு கொடுத்தார்கள். சட்டமறுப்பு இயக்கத்தில் ஒரு பெண்ணின் தாலியை பறித்தார்களே, அந்தச் சம்பவத்தைக் கண்டித்து ஏன் மந்திரிகள் ராஜிநாமாச் செய்யவில்லை. தேர்தல்களில் ஜஸ்டிஸ்கட்சி பொழியும் வரை காங்கிரஸ் நல்ல பிரசாரம் பண்ணத்தான் போகிறது.

கிராமப் புனருத்தாரணத்துக்காக, சர்க்கார் கொடுக்கப் போகும் ரூ. 1 கோடியில் சென்னைக்குக் கொடுக்கும் 16 லக்ஷத்தை ஜஸ்டிஸ் கக்ஷிப் பிரசாரத்துக்கு உபயோகப்படுத்தப் போவதாக பத்திரிகைகளில் பிரசுரமா யிருக்கது.

ஆனால் அப்படிச்சொல்வது பித்தலாட்டமென்றும், துஷ்பிரசார மென்றும், இப்பணத்தை பொக்கிஷ இலாக்காவே செலவழிக்கும் என்றும் மந்திரி ஸ்ரீ. ராஜன் சொல்லுகிறார். இதிலிருந்து இவர்கள் பணத்தைக் கொடுத்தால் சரியான வழியில் செலவு பண்ண மாட்டோமென்று மந்திரிகளே ஒப்புக்கொண்ட மாதிரியாகி விட்டது.

காங்கிரஸ் அங்கங்கே, "விஜிலென்ஸ்", கமிட்டி வைத்திருக்கிறது.

ராஜபார்ட், ஸ்ரீ குமாரஸ்வாமி ரெட்டியார், இரட்டையாட்சி எல்லோராலும் வேண்டாமென்று கண்டிக்கப்பட்டதென்று கூறுகிறார். 15 வருஷமாய் கட்டியழுதாய் விட்டது. வரும் சீர்திருத்தம் இதைவிட முன்னேற்றமானதென்கிறார். ஏனெனில் 8 மந்திரிகளிருப்பார்கள். அவருக்கு இப்போதே நாவில் ஜலம் ஊறுகிறது. தேசத்தை சீர்திருத்தத்துக்கு தயார் செய்யப் போகிறார்களாம். சென்ற 15 வருஷத்தில் ஒரு நாளாவது பட்ஜெட்டை ஒத்துக்கொள்ள முடியாதென்று மந்திரிகள் சொன்னதில்லை. இப்போது பணமில்லை பொக்கிஷ இலாகா வேண்டிய பணம் தருகிறதில்லை யென்று ஸ்ரீ. ரெட்டியார் சொல்லுகிறார். ஆனால் கவர்னரிடம் வரவு செலவு திட்டம் வேண்டாமென்று மறுக்க இது சரியான ஜவாப் அல்ல. ஜனங்களே கவனித்துக் கொள்ளுங்கள். இவர் படிப்பு மந்திரி. படிப்புக்கு வேண்டிய பணம் சர்க்கார் கொடுக்கா விட்டால் வெளியே வந்துவிடுவதுதானே. இவர் கலால் இலாகாவுக்கும் மந்திரி குடியை யொழிக்க முடியாவிட்டால் ராஜீநாமா செய்வது தானே.

எந்தக் கக்ஷியார் தேசத்துக்கு உழைப்பார்களென்று ஓட்டர்கள் பார்க்க வேணுமென்று மந்திரி கேட்கிறார். ஜனங்கள் அதைத்தான் தேர்தலில் நிதர்சனமாய்க் காட்டி விட்டார்களே. இன்னும் ஏன் பார்க்க வேண்டும்? சர்க்காருக்கு எதிரியாகையால் காங்கிரசுக்கு அனுசரணை செய்யக் கூடாதென்று சொல்லுகிறார் ஸ்ரீ ரெட்டியார்.

அன்னிய தேசத்தின் ஆதிக்கத்திலிருந்து நாட்டை விடுவிக்க, காங்கிரஸ் பாடுபடுகிறது. மற்றெந்தக்கட்சி தேசத்துக்காகப் பாடு படுகிறது?

காங்கிரஸ் ஆதிக்கத்துக்கு வந்த பிறகு இங்கிலீஷ்காரர்களை இந்தியாவிலிருந்து, மூட்டை முடிச்சுகளுடன் வெளியேற்றி விடுமென்று ஸ்ரீ. ராஜன் சொல்லியிருக்கிறார். அது முழுப்பொய். காங்கிரஸ்காரர் ஒருவரும் அப்படிச் சொல்லவே யில்லை. இங்கிலீஷ்காரர்களுக்கு ஆதிக்கம் குறைந்து விட்டால் அவர்களே போய்விடுவார்களே. நாங்கள் எந்த தேசத்தாரும் இந்தியாவுக்கு வரட்டு மென்கிறோம். ஆனால் இங்கிலீஷ்காரர்கள், நம்முடன் சகோதர பாவமாய், சம உரிமையுடனிருப்பதில், ஆக்ஷேபணையில்லை. மூட்டை முடிச்சுடன் இங்கிலீஷ்காரர்கள் தேசத்தை விட்டுப் போக வேணுமென்று சொல்லவே யில்லை.

ஜஸ்டிஸ் கக்ஷி மந்திரிகள் ஆளுவதை விட இங்கிலீஷ் சிவிலியன்களே நம்மை ஆண்டால் தேவலையென்று காங்கிரஸ்காரர்கள் சொன்னதாக மந்திரி சொல்லுகிறார். யார் அப்படிச் சொன்னார்களென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் சில விஷயங்களுக்கு அந்தப்படி தேவலையென்பது என் அபிப்பிராயம். மாதிரி காட்டிக் கொள்வதை விட, ஸ்ரீ வெள்ளையர் ஆண்டு, நேருக்கு நேர் அவர்களுடன் யுத்தம் செய்தால் பாவாயில்லையென்றே தோன்றுகிறது. இப்படி அநேக விஷயங்கள் காங்கிரஸ்காரர் மேல் சொல்லிக்கொண்டே போவேனென்று ஸ்ரீ. ரெட்டியார் சொல்லுகிறார். ஆனால் அந்த உதாரணங்கள் என்னவென்று சொல்லவில்லை. காங்கிரஸ்காரர் உள்ளே வந்து உத்யோகம் ஏற்றுக்கொண்டால் என்ன செய்வது என்ற பயம், ஜஸ்டிஸ் கக்ஷிக்கு ஏற்பட்டு விட்டது. இந்தக் கிலி அவர்களைப் பலமாய் பிடித்து விட்டது.

ஸ்ரீ. ரெட்டியார் ஜஸ்டிஸ் கக்ஷியார் செய்தவற்றைப்பற்றி விரிவாய்ச் சொல்லியிருக்கிறார். ஒரு ராஜீய கக்ஷி செய்ய வேண்டியதை ஜஸ்டிஸ் கக்ஷியார் செய்யவேயில்லை. நல்ல வேலை செய்திருக்கிறோமென்று அவர்களே சொல்லிக்கொள்வதா? பனகால் ராஜா கிராமாந்திர புனருத்தாரணத்துக்கு அநேகம் செய்திருப்பதாக, ஸ்ரீ. ரெட்டியார் சொல்லுகிறார். ஆனால் கிராமங்கள் 15 வருஷங்களுக்கு முன்னிருந்ததை விட இப்போது இன்னும் அதிகமான க்ஷீண கதியையே யடைந்திருக்கின்றனர், யாரைச்சொல்லி யாரை ஏய்க்கப் பார்க்கிறார்கள்? எவ்வளவுகிராமங்களுக்கு ரஸ்தா, ஆஸ்பத்திரி சுகாதார வசதி முதலியவைகள் செய்திருக்கிறார்கள்?





காங்கிரஸ் இதுவரை 15 வருஷமாய் உருப்படும் திட்டத்தை அனுசரிக்காமல் நாசகாரித் திட்டத்தையே அனுசரித்ததென்றும் ஜஸ்டிஸ் கக்ஷியின் வேலையைப் பார்த்து கிராமக் கைத்தொழில் சங்கத்தை ஏற்படுத்தியிருக்கிறதென்று ஸ்ரீ ரெட்டியார் சொல்லியிருக்கிறார். காங்கிரஸ் இல்லாவிட்டால் இவருக்கு மந்திரி பதவி வருமா? காங்கிரஸ் செய்த யுத்தத்தால்தான் எங்கு போனாலும் இந்தியாவென்று அறிகிறார்கள். கூவத்துக்கு வடக்கே ஸ்ரீ ரெட்டியாரை யார் கூப்பிடுகிறார்கள்? காங்கிரஸ் ஒன்றும் செய்யவில்லையென்று சொல்லுவது சுத்தத்தவறு. ஒன்றும் செய்யவில்லையென்று சொல்ல, மந்திரிக்கு என்ன தைரியம், என்ன இறுமாப்பு? மந்திரி என்ன செய்துவிட்டாரென்று நான் கேட்கிறேன். பிறகு காங்கிரஸில் ஜாதிச் சண்டையிருப்பதாகக் கூறுகிறார். காங்கிரஸ் தேசத்தைக் காட்டிக் கொடுக்கவில்லை. அவர் சமூகங்களைப்பற்றி ஜனங்கள் நினைக்கும் வரை சமூக உணர்ச்சியை விடமாட்டாராம். அதாவது எப்பவும் ரெட்டியாரென்று நினைத்துக் கொண்டிருப்பாராம். இப்படி இருந்தால் சுயராஜ்யம் எப்படிவரும்? வகுப்புவாதமிருக்கும் வரை பிரதிநிதித்வ நிர்பந்தம் ஏற்படும். காங்கிரசில் ஜாதிச் சண்டை கிடையவே கிடையாது. அப்படி இருப்பதாகச் சொல்வது சுத்தப் பித்தலாட்டம்.

காங்கிரஸ் உத்தியோகம் கேட்கவுமில்லை. கொடுத்தாலும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். நாங்கள் உத்தியோகம் ஏற்றால் அது தேசகைங்கர்யம் செய்து தேசத்தை நல்ல முறையில் ஆளுவதற்குத்தான். ஆனால் ஜஸ்டிஸ் கக்ஷி செல்வது உத்தியோக வேட்டைக்குதான். ஒன்றுக்கொன்றுள்ள வித்தியாசம், வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்கும் உள்ளது போலிருக்கும்.

ஆகையால், சர்க்காருக்கு தேசத்தை காட்டிக் கொடுக்கும் ஜஸ்டிஸ் கக்ஷிக்கு ஓட்டுக் கொடுக்கக் கூடாது. சர்க்காருடன் யுத்தம் போடும் காங்கிரஸ்காரர்களுக்கேதான் ஓட்டுக் கொடுக்க வேண்டும்.

ஸ்ரீ. ராஜன், காங்கிரஸுக்கு வேலைத் திட்ட மில்லையென்று சொல்கிறார். காங்கிரஸ் காரச்சியில் வேலைத்திட்டம் போட்டிருக்கிறது. ஜஸ்டிஸ் கக்ஷிக்குத்தான் வேலை திட்டமே கிடையாது. இங்கிலாந்தில் இந்தியா ஒரு தேசமானதென்றும் இங்கிலீஷ்காரர்களை வெளியே யனுப்பினால் பர்மாவில் இந்தியரை வெளியே யனுப்புவது சரியென்றும் மந்திரி சொல்லுகிறார். இதற்கும் அதற்கும் ஒருசம்பந்தமுமில்லை. சரித்திரம் புதிதாய் எழுதுகிறார்கள் போலும்! ஜஸ்டிஸ் கக்ஷி சட்டமறுப்பு இயக்கத்தை அடக்கி சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டியது என்று கூறி, சர். உஸ்மானை தோத்திரம் செய்திருக்கிறார். சட்டத்தையும் அமைதியும் எந்தச் சர்க்காரும் நிலைநிறுத்த வேண்டியதுதான். ஆனால் அக்ரமமான வழிகளில் செய்யக் கூடாது. உலகத்தில் இந்தியாவில்தான் நிரபராதியான மறியல் செய்தவர்களை அடித்தார்கள். சர்க்காருக்கு மூட்டை தூக்காவிட்டால் இவர்களுக்கும் மந்திரிகளுக்கும் பதவி ஏது? போலீஸ் அக்ரமத்தை ஜஸ்டிஸ்காரர்கள் கண்டித்ததாகச் சொல்லுகிறார்கள். அது சுத்தப் பொய்; சட்டசபையில் போலீஸைக் கண்டித்த தீர்மானத்தில் சர்க்கார் பக்கம் ஓட்டுக் கொடுத்து தீர்மானத்தை தோற்கடித்தனர். இப்படி ஸ்ரீ. ராஜன் சொன்னதில் ஒன்றுக்கொன்று முரணாகவே யிருக்கிறது. ஜனங்கள் இவைகளை நன்றாய் ஞாபகம் வைத்துக் கொண்டு ஜஸ்டிஸ் கட்சியாருக்கு ஓட்டுக் கொடுக்கக் கூடாது. இரண்டு கக்ஷியின் யோக்யதையையும் பார்த்து யார் தியாகம் செய்து தேசத்துக்கு உழைத்திருக்கிறார்களோ அவர்களுக்கே ஓட்டு செய்யுங்கள். காங்கிரஸ் தேசியக் கக்ஷி. ஜஸ்டிஸ் சிறுபான்மையான வகுப்பு வாத தேசத்துரோககக்ஷி, எல்லோரும் காங்கிரசில் சேர்ந்து கதரை அபிமானித்து சுதேசித் தொழிலை ஆதரிக்க வேண்டும்.

திருநெல்வேலி ஜில்லா போர்டு தேர்தல்களுக்கு காங்கிரஸ் அபேட்சகர்களுக்கே ஓட் செய்ய வேண்டும்.

---

## கப்பற்காரர்கள் தொல்லை

2 வாரம் முன்பு ஜினீவாவில் 48 மணி வாரத்தைப் பற்றி பெரிய வாதம் நடந்ததில் கப்பற்காரர்களுக்கு வேலை நேரக் குறைவு ஏற்படுத்தப்பட்டதாகத் தெரியவில்லை. அது பற்றி ராயபுரம் தென்னிந்திய கப்பற்காரர்கள் சங்கம் கிளர்ச்சி செய்ய உத்தேசித்திருக்கிறார்கள். இப்போது கப்பல் சிப்பந்திகள் படும் பாடு மிக மிக மோசம். ரோக லீவு வாங்கவோ, போதுமான வேளைகளில் பெண்டு பிள்ளைகளை பார்க்கவோ முடிவதில்லை. சாப்பாட்டு நேரம் தவிர ஓய்வே கிடையாது. கப்பலுத்தியோகஸ்தர்கள் கூப்பிட்டால் எந்த சமயத்திலும் ஆஜராகவேண்டும். அதிக நேரம் வேலை செய்தால் அதற்காக சம்பளமில்லை. சொந்தவூர்த் துறைமுகங்களில் கப்பல் வரும்போது லீவு கேட்டாலும் பெறமுடியாது. ஆகவே அடியில் வரும் நிவாரணங்கள் வேண்டுகின்றனர் :—

(1) ஒவ்வொரு வருடமும் 15 நாளாவது முழுச் சம்பளத்துடன் ரஜா வேண்டும்.

(2) கப்பல் வேலைக்குப் பாதகம் வராத நிலைமையில் அவ்வப்போது சிப்பந்திகள் சொந்தவூர் சென்று வருகிற மாதிரியில் 'காஷுவல் லீவ்' கொடுக்கப்பட வேண்டும். இந்த லீவை திருப்பு முறையில் கொடுக்கலாம்.

(3) இதர தொழிலாளிகட்கிருக்கும் சௌகரியங்களும் உரிமைகளும் கப்பல் தொழிலாளிகட்கும் வேண்டும்.

—ஒரு நிருபர்

# கதைப்பகுதி

## இரண்டு சித்திரம்

(எஸ். கே. எஸ்,)

இந்தியாவின் பூங்காவனம் (Garden of India) என்று புகழ்ப்படும் மலையாள தேசத்தில், ஓவியவல்லோர் ஜாபிதாவில் பிரதமஸ்தானம் பெற்றிலங்கும் இரவிவன்மனை தெரியாதாரிருக்க முடியாது. இரவிவன்மனின் முக்கிய சீடனாகிய சுகுமாரன் தனது அழகிய அறையின் நடுவே நாற்காலி ஒன்றிலமர்ந்து, நாற் புறமும் சுவரில் தொங்கவிட்டிருக்கும் பெரியார்களின் ஓவியங்களைக் கண்டு மன மகிழ்ச்சி யடைந்து கொண்டிருக்கின்றான். கற்றோர்க்கு கவி யின்பத்தில் அளவிலா ஆனந்தம் கிடைப்பது போல, ஓவிய வல்லோருக்கு தம் படங்கள் இன்ப மூட்டுவது ஒருதலை. சுகுமாரன் பலப் பல படங்களைப் பார்த்து மகிழ்ந்ததும் மனதில் திடீரென்று ஓர் இருள் சூழலாயிற்று. அடுத்தது காட்டும் பளிங்கு போல், நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம் அன்றோ? சுகுமாரனின் இதயத்தில் ஏற்பட்ட மாற்றத்தை வதனம் வெளியே காட்டிற்று. சற்று நேரம் மௌனமாயிருந்த பின்னர் அவன் 'உலகத்தில் எல்லையிலா இன்பம் அனுபவிப்பவனின் ஓவியம் ஒன்று வரைவேன்' என்று வாய்விட்டு கூறினான். இவ்வுறுதியுடன் நாற்காலியைவிட்டு எழுந்து அங்கு மிங்கும் பெருத்த சிந்தனை யிலாழ்ந்தது விட்டவன் போல் தரையை நோக்கிய வண்ணமே நடந்தான். நடந்ததும் தம் மனோரதப்படி உண்மையான இன்பத்தை அனுபவிப்பாரைக் காண்பது எளிதல்ல என்று எண்ணினான். இவ்வுலகில் அளவற்ற சுகபோகங்கள், அனுபவிப் போனை கண்டறிவது எங்ஙனம்? அதற்கு ஏதேனும் அளவு கருவி யுண்டா? சுகுமாரன் சிந்தனையிலாழ்ந்தான். தனவந்தர்கள், கவிஞர்கள், பலசாலிகள், பரமபக்தர்கள், நாஸ்திகர்கள்.......... ஆகியோரில் யார் யார் பெரிய இன்பத்தை அடைபவர் என்று சீர்தூக்கிப் பார்க்கலானான். இந்த வகையில் அதிகமான குழப்பம் ஏற்படவும் மீண்டும் நாற்காலியில் போய் அமர்ந்தான். ஆயினும் அடங்கவில்லை. நினைத்த காரியத்தை முடித்தாலல்லாது வேறொன்றும் செய்ய முடியாது என்று தேர்ந்தான். உடன், வெளிக் கிளம்பிய சுகுமாரன் "விரு விரு" என்று வேகமாக கால் சென்ற விடமெல்லாம் நடந்தான். பல மாதிரியான மனிதர்களை வழியில் காண சந்தர்ப்பம் வாய்த்தது. அவர்களில் அதிக வறியார்களையும், மிகுந்த செல்வந்தர்களையும் காணக் காண வாலிபன் எல்லையில்லா சோகம் கொண்டான். உண்டு உடுத்து கவலை யின்றி காலம் கடத்துவோரைக் காண மனம் வருந்தவில்லையாயினும் அவர்கள் உண்மை யின்பத்தை கண்டவால்லர் என்று எண்ணினான். பின்னும் வேகமாக நடக்கையில் பல மோட்டார் காரில் மனைவியோடு செல்லும் ஜமீந்தார்களையும் பட்டதாரிகளையும் ராஜாக்களையும், மன்னர் நண்பர்களையும் கண்டான். அவர்களும் அவனுக்கு உண்மை இன்பம் அனுபவிப் பவர்களாகத் தோன்றவில்லை.

இவ்விதம் நீண்ட நேரம் பலவை யாராய்ச்சி செய்து பல மைல் தூரம் நடந்ததும், ஒரு தெருக் கோடியில் சிறு குழந்தைகள் பலர் விளையாடி கொண்டிருப்பதைக் கண்ணுற்றான். வாலிபனது கால்கால் அங்கு சென்றன. அங்கு குழந்தைகளின் விநோதங்களையும், வேடிக்கைகளையும், யாழினுமினிய மழலை இன்மொழிகளையும், வேற்றுமையற்ற விநோத நடவடிக்கைகளையும், களங்கமற்ற நேச மனப்பான்மையையும் கண்ணுற்றான். கண்ணுற கண்ணுற ஓவியக்காரனின் கண்ணும் பின் இருதயமும் பின் மனமும்—ஏன் ஆன்மாவே—மலர்ந்தது; குளிர்ந்தது; குதூகலித்தது. ஆனந்த சொரூபிகளான குழந்தைகளே உலகில் அளவிலா இன்பம் அனுபவிப்பவர் என்று மனமார எண்ணினான். அவ் எண்ணம் உதிக்கவும் அதுகாறும் சஞ்சலத்தால் சுருங்கியிருந்த கைகள் மகிழ்ந்து எழுந்தன.

சுகுமாரன் அக்கூட்டத்தில் காணப்பட்ட அழகிய குழந்தை யொன்றை அன்போடு அழைத்தான். குழந்தை அந்நியனின் மலர்ந்த முகத்தைக் கண்டு எழுந்தது; எனினும் அருகில் செல்ல நாணம் கொண்டது. உடன் சுகுமாரன் கையிலிருந்த சித்திரமொன்றை நீட்டினான். குழந்தை அதனைப்பெற்று அருகில் வந்து நின்றது. சற்று நேரத்தில் அதின் கண்கள் சித்திரத்தில் பதிந்தன. அந்தத் தருணத்தில் விரைவாக சுகுமாரன் படத்தை விரைந்து முடித்தான். அப்பால் அதனை எண்ணெய்ச் சாயத்தில் பெரிய படமாகத் தீட்டி கண்ணாடியிட்டு தன் அறையில் மாட்டினான். அன்று முதல் தினந்தோறும் அப்படத்தைப் பார்ப்பதும் மகிழ்வதும் சுகுமாரனின் வேலையாயிற்று. அங்ஙனம் சில நாளானதும் சுகுமாரன் அப்படத்தை கவலை தீர்க்கும் மருந்தாகவும் இன்பமளிக்கும் சோலையாகவும் சங்கற்பித்தான். சுகுமாரன் அப்படத்தைப் பார்க்கும்போது "உலகில் எண்ணிறந்த உத்யோகம் பெற்றிருந்தென்ன பிரயோஜனம்? மன்னனாய்ப் பிறந்து என்ன பிரயோஜனம்? பேரழகிகள் பலரை வாழ்க்கைத் துணைவியாய்க் கொண்டிருந்தென்ன பிரயோஜனம்? பெரிய பண்டிதராய்ப் பயின்றுதான் ஆவதென்ன? குழந்தைகட்கிருக்கும் இன்பம் கடுகத்துணையேனும் அவர்கட்கில்லையே? பாழும் குழந்தைப் பருவம்! ஏன் ஒழியவேண்டும்! எந்நாளும் ஏன் அது நிலைத்திருக்கலாகாது?" என்று புலம்பலானான்.

* * *

சுமார் 20 வருடங்கள் சென்றன. உலகம் நிரம்ப மாறிவிட்டது. சுகுமாரன் ஒருவாறு கிழப் பருவத்தை யடைந்து விட்டான். ஊருக்குள் பலர் வளரவும், தேயவும், அழியவும், பிறக்கவுமாக நிரம்ப மாற்றம் ஏற்பட்டது.

ஒருநாள் சுகுமாரன் மாலை வேளையில் தனது அறையில் ஒரு ஜன்னலின் வழியாக நுழைந்துவரும் மந்தமாருதனில் குளித்திருக்கையில் தெருவில் அங்கு மிங்கும் செல்லும் பல மனிதர்கள் கண்ணில் வீழ்ந்தனர். அவர்களில் சிலர் தரித்திரத்தால் அவதிப்பட்டவர்; சிலர் நோயினால் வாடியவர்; சிலர் குடும்பத்தால் கவலைகொண்டவர். சிலர் பணக்கார ஆதிக்கத்தாலும், அரசியல் கொடுமைகளாலும், மதம் பேசுவார் சண்டைலாலும் வதங்கியவர்.

இவ்வாறு எல்லோரையும் பார்த்ததும் அவன் மனதில் "உண்மையாக துன்பம் அநுபவிப்போரே உலகில் பலர். சரியான குடும்ப அமைப்பு, தாராள அரசியல் அமைப்பு, மத மொழிப்பு, பணக்காரர் அழிவு ஆகியவை ஏற்பட்டாலல்லாது உலகில் இன்பம் தலை காட்டப் போவதில்லை. ஆகவே நிரம்ப துன்பமனுபவிப்பாரைத் தேடுவதே உண்மை தெரிவதற்கு உற்றவழி" என்ற தத்துவம் புலலாயிற்று. உடன் சற்றேறக்குறைய 20 வருடங்கட்கு முன் தீர்மானங் கொண்டதுபோல உலகில் நிரம்பக் கவலை கொண்டிருக்கும் ஒருவனின் படத்தை எழுத வேண்டும்" என்று உறுதி கொண்டான்.

கற்பனை உலகில் இயங்குபவர் ஆசை கொண்டால் அதனை விட்டு வைக்க மாட்டாரன்றோ? சுகுமாரன் மீண்டும் கவலை கொண்ட ஒருவனைத்தேடி நடக்கலானான்.

சற்றுப் போனதும் முதுகோடு ஒட்டிய வயிறுடன் 'ஹரஹரா கோவிந்தா' என்னும் கடவுள் நாம பஜனையுடன் பிச்சையெடுங்கும் கோஷ்டியாரைக் கண்டான். அவர்களை நோக்க சுகுமாரனின் மனம் உருகியது. ஆனால் பிச்சையெடுப்பார் துன்பத்திற்கு ஒரு முடிவுண்டன்றோ! சிறிது ஆழ்ந்து நோக்கியதும், சுகுமாரன் மேலே நடக்கலானான். வழியே நோயாளிகள் கத்தும் ஆஸ்பத்திரியை நண்ணினான். நோய்க்கும் ஒரு இன்பமுடிவு ஏற்படலாமன்றோ? ஆதலால் சுகுமாரன் மேலும் நடந்தான். பக்கத்து நிலங்களில் நெற்றி வியர்வை நிலத்தில் விழும் விவசாயிகளைப் பார்த்தான்; இன்னும் சற்றுச் செல்ல ஆலைகளிலிருந்து கரியில் புரண்டு, வாடிக்கருகிவரும் தொழிலாளிகளை நெருங்கினான். அவர்கள் துன்பத்திற்கும் முடிவுண்டு என்று சங்கற்பித்தான். அப்பால் சுகுமாரனின் வழியை



மறித்து நின்ற மத்திய சிறை வந்தது. அதனை அண்மியதும் ஜன்னல்கள் வழியாக எட்டிப் பார்த்த கைதிகள் முகம் சுகுமாரனை கவர்ந்தன. ஜீவித காலம் பூராவும் சிறைக்குள்ளே தள்ளப்பட்டு வேலை செய்ய தவறினால், சாட்டையால் அடிக்கப்படும் கைதிகளின் இரங்க தக்க நிலைமையில் அளவிலா கவலை கொண்டான். சுகுமாரன், எத்தனை பேர் தேசத்திற்காக தன் இன்பங்களை தியாகம் செய்ததற்குக் கைமாறாக கொடிய சிறை வாசத்தை அனுபவிக்கும் நிலைமையைப் பெற்றிருக்கின்றார்கள் என்று எண்ணிக் கலங்கினான்.

மனிதர்களாய் பிறந்தவர்கள் அனைவரும் சமமாக இன்பம் அனுபவிக்க வேண்டுமென்று உழைக்கும் மக்களை மனிதன் அடக்கியாள்கின்றானே என்று நினைக்க நினைக்க அதுவே பெரிய துன்பமாகத் தோற்றியது. உடன் கடும் வெயிலில் வேலை செய்வதற்கு விடப்பட்டிருக்கும் கைதியொருவனின் ஓவியத்தை வரையவேண்டுமென்று நினைத்து தனது எண்ணத்தை சிறை அதிகாரியிடம் தெரிவித்தான். முதலாவது அவர் சட்டம் அனுமதியாது என்று காரணம் கூறினார்; ஆயினும் அப்பால் வெள்ளி வட்டங்கள் சில தலை காட்டியதும், சரியென்று சம்மதித்து விட்டார். லஞ்சம் கொடுத்தால் எக்காரியத்திற்கும் இடங்கொடுக்கும் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் அமர்ந்திருக்கும் இக்காலத்தில், ஒரு சிறையாளியையா படம் எழுத விடமாட்டார்கள்?

சுகுமாரன் வசதியாக ஒரு கைதியை அசையாமல் நிற்கவைத்து படம் வரைய ஆரம்பித்ததும், அக்கைதியின் கண்களிலிருந்து நீர்த் துளிகள் சில நிலத்தில் வீழ்ந்தன. சித்திரம் வரைவதிலேயே கவனமாயிருந்த சுகுமாரன் அதனை காணவில்லை. சற்று நேரத்தின் பின் கைதியின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக பெருகிற்று. நீண்ட பெருமூச்சு அவன் காதுகளைத் துளைத்தன. உடன் மனதைப் பிடித்திழுத்து பேசினான் சுகுமாரன். தன்னெதிரே நின்ற கைதியின் கண்களிலிருந்து கண்ணீர் வடிவதையும் மூக்கிலிருந்து பெருமூச்சு எழுவதையும் உணர்ந்தான். உடன் சுகுமாரன் கைதியிடம் காரணம் கேட்க அவன் ஓவென்று அழுது கொண்டே வீழ்ந்து நமஸ்கரித்து இவ்வாறு சொல்லலானான்:—

"எனது குழந்தைப் பருவத்தில் தெருக் கோடியில் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது சித்திரப் படம் தந்து, அன்புடன் பேசி அணைத்து, முத்தமிட்டு, அசையாமல் நிற்கச் சொல்லி, எனது படத்தை வரைந்து போனீர்களன்றோ? இப்போது துன்பக் கடலில் ஆழ்த்தப்பட்டிருக்கும் எனது படத்தையே வரைகின்றீர்களே! எதற்காக......................?" என்றான். என்றதும் பின்னும் அழத் தொடங்கினான்.

நம்து ஓவியவல்லோனில் மூளை குழப்பமுற்றது. உலக அமைப்பைப்பற்றி நினைத்து எரிச்சல் கொண்டான். உடன் அவன் கைகள் வரைந்த படத்தை துண்டு துண்டாகக் கிழித்தெறிந்தன. உலகில் காணும் வேற்றுமை சுகுமாரனின் உள்ளையும் புறத்தையும் வேக வைத்தது. சுகுமாரன் உலக இயல்பைப் பற்றி சிந்தித்து சிந்தித்து இன்பத்தின் கதி எப்படியிருக்கின்றதென்று வியந்தான். கைதியுடன் சிறிது பொறுத்துப் பேசிப்பார்த்ததில் தேசீய காரணங்களை முன்னிட்டு அவன் சிறைக்கு வந்துள்ளதாக தெரிந்ததும், சுகுமாரன் நவீன அரசியலின் மீது கொண்ட கோபத்திற்கு அளவு கிடையாது.

இப்போது சுகுமாரன் பைத்தியம் பிடித்தவன் போல் காணப்படுகின்றான்.






# 70 ஆயிரம் ரூபாய் மாப்பிள்ளை

அல்லது

# நீலகிரியில் விஜயாள்

(S. கிருஷ்ணசாமி)

13 வயதான சிறுமி பொருத்தி அழுதுகொண்டு உட்கார்ந்திருக்கிறாள். தாயார் பார்த்தும் பாராதவள் போல் வீட்டுக்குள் சமையல் வேலை செய்து கொண்டிருக்கிறாள். தந்தையார் வீட்டு வெளித்திண்ணையில் நேடுநேரம் உட்கார்ந்திருந்தவர் திடீரென அருகில் சென்று புதல்வியிடம் "என்னடி விஜயா! விஷயம் விளக்காது கண்ணீர் வடிக்கிறாயே! உன்னால் நாங்கள் நல்வாழ்வு வாழலாகாதென்பது உன் ஆசையா? இதுவரையிலும் தரித்திரத்திலே மூழ்கி தத்தளித்துக் கொண்டிருந்த நாங்கள் உன் கல்யாணத்தின் பின்னாவது வயிறு நிரம்ப சாப்பிடலாமென்றிருக்கிறோம். அதனை தொலைத்துவிடவேண்டுமென்கிறாயே? இப்படி அழுவதால் என்னாகும் என்று நினைக்கிறாய்?" என்றார்.

விஜயா என்னும் அச் சிறுமி மீண்டும் அழுதாள்.

தந்தை:—ஏண்டி? நீ சொல்வது என்ன சொல். 70 ஆயிரம் ரூபாய்க்கு சொத்திருக்கிறதே; அத்தனையையும் கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போகட்டுமென்பதா உன் ஆசை?

விஜயா:—வயது அறுபதாச்சு. அதிலும் நோயாளி. தாத்தா போல இருக்கிறார்.

தந்தை:—இருந்தால் என்ன? உலகத்திலுள்ளவாளெல்லாம் கல்யாணம் செய்யாமலா இருக்கிறார்கள்? 60 வயதென்று நீ மாட்டேனென்று சொல்லி விட்டால் வேறு யாரேனும் பெண் டிருக்காமலிருக்கப்போகிறாளா? மேலும் பங்கஜத்தைப் பார். எவ்வளவு சிறு பெண்! அவள் புருஷனுக்கு வயது 50 ஆச்சே. உங்க அம்மாவைத்தான் நான் 40 வயதில் தானே கட்டினேன்! அது எப்படியாவது போகட்டும். 70 ஆயிரம் ரூபாயென்றால் இலேசா?

வீட்டுக்குள்ளிருந்து வந்த தாயார் "உன் பெயரை சொல்லி நாங்களாவது பிழைகட்டுமே விஜயா" என்றாள்—பெண் அப்புறம் பேசவேயில்லை.

மூன்று நாள் கழிந்தன; விஜயாள் பரமேஸ்வரஐயர் என்ற 60 வயது கிழவனுக்கு மணம் செய்து வைக்கப்பட்டாள். பரமேஸ்வர ஐயர் கிழவன் என்பதோடு காசநோய்க் கடிமைப்பட்டு இருமி இருமி காலந்தள்ளுபவர். ஏதோ ஜோசியர்கள் பலாபலன் கூறினார்களென்றும், இறக்குமுன் கல்யாணம் செய்து கொண்டால் சாந்தி ஏற்படுமென்றும் சொன்னதால் தான் கல்யாணத்திற்கு முனைந்தாராம். அன்றி 13 வயது சிறுமியை மணந்து லௌகீக சுகமனுபவிக்க முடியும் என்று எண்ணியவரன்று. 60 வயதுக்குமேல் காசநோய் குணமாகி கல்யாண சுகமனுபவிக்கும் காலம்வரும் என்று காரியமுள்ள எவனாவது கருதுவானா?

பரமேஸ்வர ஐயர் மணமாகிய ஏழாம் நாள் இயமலோகம் சென்றார். ரூபாய் 70 ஆயிரம் விஜயாவின் தந்தை சாம்பசிவ ஐயருக்கு கிடைத்துவிட்டது.

ஆனால் 70 ஆயிரமிருந்தும் விஜயாவுக்கு ஏதேனும் இன்பமுண்டா?

* * *

நல்லது. வருடம் ஐந்து சென்றன. ஊருக்குள் எவ்வளவோ மாற்றம்! விஜயா புத்தியறிந்து அழகு பெருகி பார்ப்போர் பேதலிக்க வேண்டிய விதவையாகிவிட்டாள். அவள் மனமெல்லாம் கவலை; ஏக்கம்; துக்கம். சாம்பசிவ ஐயர் பெரிய லக்ஷாதிபாகி வீடுவாசல் நிலம் புலம் ஆடுமாடு முதலியவற்றுடன் பெரிய மனிதராகிவிட்டார். வெறும் சாம்பசிவ ஐயராயிருந்ததுபோக சண்டப்பிரசண்ட சாஸ்திர ஞான சனாதன சாம்பசிவ சாஸ்திரியாகி விட்டார். சனாதன தர்மத்தில் தலை சிறந்தவரென்று அவருக்குப் பெயர். அவர் மனைவியும் புதுப் பெண்போல் கொழுத்து தளதளப்பாக மாறிவிட்டாள்.

• • •

ஜன்மத்தூர் ஓர் சிற்றூர். சண்டப்சண்ட சாஸ்திரஞான சனாதன சாம்பசிவ சாஸ்திரியே அங்கு பெரிய மிராசுதார். இவருடைய பெயரைக் கேட்டால், அழுத குழந்தையின் கண்ணில் நீர்வடியும். சதாகாலமும் சனாதன தர்மத்தையே சிந்தித்து அடிக்கடி ஊரில் கூட்டம் கூட்டி சாஸ்திர கர்ஜனை செய்து வருவார். மஹாத்மாஜீயின் பெயரைக் கேட்டால் அவர் கண்கள் சிவக்கும். அபேதவாதிகளைக் கண்டால் கன்னங்கள் சிவப்புநிறமாகும். ஒரு கதர்க் குல்லாய் அணிந்த தலையைக் கண்டால் எப்படியாவது அந்த எல்லையை விட்டுக் கடத்திவிட வழிதேடுவார். இவருக்கு இப்போது அநேக பணியாட்கள், சொந்த மோட்டார் ஒன்று 5 மாதத்திற்கு முன் வாங்கினார். அதற்கு சென்னையிலிருந்து ஒரு டிரைவர் வந்தான். அவனுக்கு 40 ரூபாய் சம்பளம்.

சாஸ்திரியின் நிலம், தோட்டம் முதலியவைகளில் ஒழுங்காய் ஆட்கள் வைத்து, சாஸ்திரியாருக்கு மிகவும் வருமானம் வரும்படி செய்பவன், பண்ணையாளாகிய அமாவாசை என்ற ஹரிஜனன் தான். அவன் குடும்பம் நிரம்பக் காலமாக ஜன்மத்தூரிலேயே இருக்கிறது. பல உடன்பிறந்தோருண்டு. சிலர் கிருஸ்தவர்களாகி விட்டனர். சிலர் விடாப் பிடியாக இந்து மதத்தைக் கட்டி தீண்டாமை ஒழிப்புக்குப் பாடுபடுகின்றனர். அமாவாசையின் தம்பியொருவன் சிறுவயதில் எங்கேயோ ஓடி விட்டான். சென்னையில் ஒரு பாதிரி யுதவியால் கொஞ்சம் கல்வி கற்றானென்று கேள்வி.

• • •

ஜன்மத்தூர், சிறு கிராமம்; ஆதலால் இரவு 8 மணிக்கே ஊர் அரவம் அடங்கிவிடும். அந்த லக்ஷணத்தில் மணி சுமார் 11 ஆனால் எப்படியிருக்கும்? சாஸ்திரியின் பங்களாவின் முகப்பில் ஓர் அழகிய அறை. அவ்வறையின் கதவு மூடப்பெற்றிருந்தது. சாளரம் மட்டிலும் திறந்திருந்தது. பூந்தோட்டத்தின் மெல்லிய காற்றும், பூர்ண சந்திரன் பொன்னொளியும் அச்சன்னலின் வழியே புகுந்து கொண்டிருந்தன. ஒரு நாற்காலி, ஒரு மேஜை, ஒரு பாய், ஒரு தலையணை, மேஜை மேல் ஒரு விளக்கு, சில புத்தகங்கள் இவைகளே அவ்வறையிலுள்ள சாமான்கள். மேஜைக்கு அருகிலிருந்த நாற்காலியின் மீது

ஓர் அழகிய பெண் வீற்றிருந்தாள். கருத்து நீண்டு, சுருண்டு, அடர்ந்த அவள் கூந்தல் அவள் பின் பொலிவை மறைத்துக் கொண்டிருந்தது. அக் கூந்தல் எண்ணெயைக் கண்டு ஒரு மாதத்திற்கு மேல் இருக்கலாம். மனோகரமான நெற்றியும், வில் போன்ற புருவங்களும் வசீகரிக்கும் விழிகளும். பிற உறுப்புக்களும் புகழ்ந்து கூறற்பாலன. இவ் இள நங்கைக்கு வயது சுமார் 18 இருக்கலாம். அணிகலம் ஒன்றும் அவள் மீது இல்லை. எனவே அவள் இயற்கை அழகு பதின் மடங்கு பெருகி சோபித்தது. இவ்வழகிய மங்கை பகல் விளக்கென பொலி விழந்து கண்ணீர் கசிந்துருக பின் வருமாறு தனக்குள் புலம்பிக் கொண்டிருந்தாள்:—

“இனி என் வாழ்கை தகாததுதான் நான் வாழ்ந்தென்ன பிரயோஜனம்! இன்பமேயில்லாது என் குடும்பத்துக்கும் ஊருக்கும் பாரமாக ஏன் வாழ்கின்றேன்? என்னால் என் பெற்றோர் பணம் பெற வேண்டுமென்றார்கள்; அப்படியே ஒரு லக்ஷத்திற்கு மேல் கையிலிருக்கிறது. அவர்கள் விரும்பியபடி இன்பமடைந்துள்ளார்கள். எனவே என் கடன் முடிந்துவிட்டதன்றோ? வேலை முடிந்தால் இங்கு என் இருக்கை எதற்கு? நானிருப்பதால் எனக்கும் தொல்லை; அவர்கட்கும் வருத்தம்; ஊராருக்கும் வாயடங்கி இருக்க முடியாத கஷ்டம். ஆகவே நான் விடைபெற்றுக் கொள்வதே நலம்...........பாழும் சமூகத்தில் விடுதலைக்குத்தான் வழியுண்டா? யாரோ ஒரு கிழவன்—இறக்கப் போகிறவன் காமப்பித்தால் வேண்டுமென்றான்; என் தந்தை ஆடுமாடு மாதிரி என்னை அவனுக்கு விற்பனை செய்தார். நான் மாடாக நினைக்கப் பட்டேனேயானால் மனித உடல் பெற்றிருக்கலாமா? அவசியம் நான் ஒழிந்தேயாக வேண்டும். அதைவிட்டு கலங்கிப் பயனில்லை. இத்தனை வருடங்களாக அழுகையால் பெறாத எந்தக் காரியத்தை இனிமேல் பெறப் போகிறேன்?”

என்று சொல்லிக்கொண்டே யாரையோ எதிர்பார்ப்பது போல் மிரள மிரள விழித்துக் கொண்டு அவ்வறையில் படபடப்புடன் உலாவிக் கொண்டிருந்தாள். மணி 2 அடித்தது. உடன் கண்ணீர் சொரிந்து கொண்டே நாற்காலியின் மேல் நின்று கொண்டு, மேல் உத்தரத்தின் மீதிருந்த இரும்பு வளையத்தில், ஓர் கயிற்றைக் கட்டிக் கொண்டிருந்தாள்.

அச் சமயம் ஓசைப்படாமல் அவ்வறையின் கதவைத் திறந்து கொண்டு சுமார் 24 வயதுடைய ஓர் அழகிய வாலிபன், “அதற்குள்—முடிவு சட்டப் பார்க்கிறாயா!” என்று மெதுவாகக் கூறிக்கொண்டே அப் பெண்மணியின் இடுப்பை ஒரு கரத்தினால் அணைத்தான். திரும்பிப் பார்த்த அப் பெண்மணி ஸ்மரணையற்றோ என்னுற்றோ அவ் வாலிபனின் தோளின் மேல் சாய்ந்தாள். வனிதையைச் சுமந்து வாலிபன் பங்களா கேட்டைத் தாண்டி பத்தடி தூரம் சென்று, ரஸ்தாவில் நிறுத்தப் பெற்றிருந்த மோட்டாருள் படுக்க வைத்து மோட்டாரை கனவேகமாக ஓட்டிச் சென்றான்.

* * *

காலை மணி 8. ஜனமத்தியில் ஒரே அமளி. ‘சனாதன சாஸ்திரியின் மகளை காணோம்! பங்களாவிற்குப் பக்கத்திலிருந்த மோட்டாரையும் காணோம்! டிரைவரையும் காணோம்!’ என்று பலவாறாக ஆங்காங்கு சிலர் தங்களுக்குத் தோன்றியபடி பேசிக் கொண்டிருந்தனர்.

* * *

சாஸ்திரியாரும் சாஸ்திரியார் மனைவியும், பங்களாவின் முகப்பில், கோபம் ஒரு பக்கம் கொழுந்து விட்டெரியவும்,





வருத்தம் ஒரு பக்கம் வாட்டவும், வெட்கம் ஒருபால் வெட்டவும் நின்று கொண்டிருந்தனர். அச்சமயம் பண்ணையாள் அமாவாசை கேட்டிற்கு வெளியே நின்றுகொண்டு:—

அமாவாசை:—சாமி கும்புர்றேனுங்க!

சாஸ்த்ரியார்:— (கோபத்துடன்) போடா! சாயங்காலம் வா. சமயம் தெரியாது இப்பொழுது ஏன் வந்தாய் மடையா?

அமாவாசை:—எல்லா விஷயங்களுந் தெரிஞ்சுதான் வந்தேனுங்க. இவ்வளவு நாளா சொல்லக்கூடாதுன்னு ஒளிச்சு வச்சிருந்த ஒரு சங்கதியை நாய்க்குட்டி யஜமாங்கிட்ட சொல்ல வந்தேனுங்க.

சாஸ்த்ரியார்:—(திகைப்புடன்) என்னடா சங்கதி? சொல் சீக்கிரம்!

அமாவாசை:—ஒங்ககிட்ட இருந்த மோட்டாக்கார் டைவரு, ரொம்ப நல்லவனுங்க. குடிக்கமாட்டான். பீடி கீடி புடிக்கமாட்டான். பொய் பேசமாட்டான். ரொம்ப நல்ல..............

சாஸ்த்ரி:—டேய் போடா! என்னடா சங்கதி என்றால் வாயில் வந்தபடி உளறுகிறாயே? கழுதை!

அமாவாசை:—சொல்றதை முழுக்கக் கேட்டுக்கினு அப்றம் திட்டுங்க சாமி. கொஞ்சம் தயவு செய்யுங்க.

சாஸ்த்ரி:—சொல்லித் தொலேடா; விடமாட்டாய் போலிருக்கே?

அமாவாசை:—ஒங்க மோட்டாக்காரனையும், ஒங்க மகளையும் கூட்டிக் கிட்டுப்போன அவன் அம்புட்டாண்ணு அவனைத் தயவு சேஞ்சு ஒண்ணுஞ் செய்யாதீங்க. அவ்ன் என்கூடப் பிறந்த தம்பி தானுங்க. (அழுது கொண்டே) நாங்க ரண்டுபேரும் ஒரு தாய் வயத்துப் புள்ளீங்க. காப்பாத்தனுங்க சாமி!

என்று சொல்லிக்கொண்டே அடியற்ற பனைபோல் ரஸ்தாவின்மீது விழுந்தான்.

சாஸ்த்ரியார் மனம் துடிதுடித்தது. முன்பிருந்த கோப யக்ஞத் தீயில் நெய் ஊற்றியதுபோல் கொழுந்து விட்டெரிந்தது.

சாஸ்த்ரியார்:—அட மடக்கழுதே! ஏண்டா அந்த டிரைவரைப்பற்றி ஆறு மாதகாலமாய் சொல்லவில்லை? அவன் என் வீட்டிற்குள் தாராளமாய் வந்து போய்க் கொண்டிருந்தானே? நாங்களும் வெளியில் போகும்போது அவனுடன் சகஜமாய் காருக்குள் உட்கார்ந்து கொண்டிருந்தோமே? கெடுத்தானே குடியை கெடுத்தானே? கிராதகன்! சண்டாளன்! நீசன்! துரோகி!



அமாவாசை:—வயத்துக்குக் கஞ்சி ஊப்பார்து ரொம்ப கஸ்ட்டமாயிருக்குது. ஐயா கிட்ட என்னை ஒன் தம்பின்னு சொல்லாதே! நான் துண்டா இக்குறேன். இதே ரகசியமாய் வச்சுக்கோண்ணு சொன்னானே பாவிப்பய! இந்த மாதிரி செய்வாண்ணு எனக்குத் தெரியாதே?

சாஸ்த்ரி:—போடா என் முன் நில்லாதே. ஓடு இவ்விடத்தை விட்டு. இல்லாவிட்டால் புளியமிளாறு கொண்டு வந்து வெளுத்து விடுவேன்.

* * *

நாட்கள் 2 சென்றன. சாஸ்த்ரியாருக்கு கீழ்க் கண்டவாறு ஒரு கார்டு வந்தது:—

புளிப்பூக் ரோமம்,
23—1—39.

மாப்பிள்ளைக்கு அநேக ஆசீர்வாதம்!

இரண்டு வேளைக்கு முன் உன்னுடைய மோட்டார் இங்கு வந்தது. ...

பின்னும் இங்கு வருவதாகவும், மோட்டாரை இங்கு கொண்டுபோகச் சொன்னதாகவும், சொல்லி, மோட்டாரை இங்கு நிறுத்தி விட்டுப் போன, டிரைவரைக் காணோம். விவரத்தை உடனே தெரிவிக்கவும். இல்லாவிடில் உடனே புறப்பட்டு வரவும்.

உனதன்புள்ள மாமா,
வைதீக ராமசாமி.

கடிதத்தை வாசித்ததும் மனைவியிடம் சாஸ்திரி:—நல்லவேளை. 6000 ரூபாய்க் காரையாவது விட்டு விட்டுப் போனானே. அது போயிருந்தாலும் பாவாயில்லை! நினைக்க நினைக்க வயிறு குமுறுகிறதே! ஜாதியில் பறையனாம்! ஐயோ! (என்று தலையிலறைந்து கொண்டார்.)

* * *

இப்படியிருக்க, சுமார் 2 வருஷங்கள் சென்றன. சாஸ்திரியாருக்கு உதக மண்டலத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதைப் பிரித்து உடனே தன் மனைவியிடம் பின் வருமாறு படித்துக் காட்டினர்:—

நீலகிரி,
21—1—35.

ஸ்ரீமான் சண்டப்ரசண்ட சனாதன
சாம்பசிவ சாஸ்திரி அவர்களுக்கு,
மிராசுதார், ஜனமத்தூர்.

மிகுந்த நமஸ்காரம்!

சென்ற 21-1-33 காலையில் காணாமற் போன, நாங்கள் இருவரும் மிகவும் சௌக்யம். இப்பொழுது உங்களுடைய பேரன் ஒருவன் இங்கு அழகாக விளையாடிக் கொண்டிருக்கிறான். பிறந்து 2 வருஷம் ஆகிறது. என்ன பெயர் சூட்டுவது என்று தெரியவில்லை. காலமும் அங்கு வெய்யிற் காலம்; இங்கு ஸீஸன் நன்றாக இருக்கிறது. ஆதலால் தாங்கள் தம்பதி சமேதராய் இங்கு வந்து பேரனுக்கும் பெயரிட்டு கொஞ்ச காலம் தங்கியிருக்கலாம். ஆவலுடன் தங்கள் வருகையை எதிர் நோக்குகிறோம்.

இப்படிக்கு,
தங்கள் விஜயா.

P. S. மிகுந்த பணக்காரரான, ஜமீன்தார் செல்வபதி ப்ரபுவின் டி எஸ்டேட்டின் ஏஜண்டும், தங்கள் பழைய டிரைவருமான, சுந்தரம் என்பது எங்கள் விலாசம்.

—விஜயா

சாஸ்திரி வயிறு பற்றி எரிந்தது.

# சிவப்புச் சேனை

அல்லது

# உலகை மயக்கும் ஓங்கிய சக்தி

சோவியத் ருஷ்யாவில், உலகமெல்லாம் பயத்துடன் வியந்து நோக்கும் பெரிய ராணுவம் அமைந்திருக்கின்றது. அதனைக் கண்டு தான் பல தேசங்கள் நடு நடுங்குகின்றனவாம். ஹெர் ஹிட்லர் தம் நாட்டில் கட்டாய ராணுவப் பயிற்சி முறையை நிறுவியதற்கு சோவியத் ராணுவமே காரணமாம்............

ஆனால் இதர நாடுகளைப் போல ருஷ்ய வீரர் இயமகிங்கரர்களல்லர். அவர்கள் வாழ்வதும், சாவதும், உண்பதும், உறங்குவதும் தம் கொள்கையை நிலை நாட்டவே என்பதை ராணுவத்தினால் கூட விளக்குகின்றார்கள். ஈண்டு, ஒருவர், பம்பாய் க்ரானிகில் பத்திரிகையில், லெனின், ஸ்டாலின் ஆகியோர் சோவியத் செஞ்சேனையின் அமைப்பு, வடிவம் ஆகியவற்றைப் பற்றி என்ன சொல்லியிருக்கின்றார்கள் என்பதுபற்றி எழுதியுள்ளார். அதனை மொழிபெயர்த்துத் தருவோம்:—

சோவியத் சிவப்பு ராணுவந்தான் உலகிலேயே வலிமை மிக்கது. சமீபத்தில் ருஷ்யா யுத்த மந்திரியாகிய தக்காசெவ்ஸ்கி என்பவர் ஓர் அறிக்கை மூலம் சென்ற வருடத்தில் ராணுவம் நூற்றுக்கு 56 விகிதம் அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கிறது என்று கூறினார். அப்போதுதான் உண்மையில் பலர் வாய் பிளக்கலானார்கள். ஹெர் ஹிட்லர் தன்னாட்டில் கட்டாய ராணுவப் பயிற்சி முறையை ஏற்படுத்தியதற்கு மேற்படி யுத்த மந்திரியின் அறிக்கையே காரணமாம்.

சிவப்பு ராணுவம்பற்றி 4 விஷயங்களைச் சொல்ல வேண்டுவதுண்டு:—

(1) சிவப்பு ராணுவம் தான் உலகில் பெரிய (Standing) ராணுவம். சமாதான காலத்திலும் வேலை பார்ப்பவரான 9,40,000 பேர் அதிலிருக்கின்றனர். இந்த 9 லட்சம் பேர்களில் ஆக்பு என்ற பழைய ராணுவம் சேர்க்கப்படவில்லை. ஆக்பு, ரயில்வே, எல்லைப்புறம் முதலியவற்றில் காவல் செய்வதோடு நகரங்கள் முதலியவற்றிலும் தொண்டாற்றும் ஒரு பகுதியாகும். இதன் எண்ணிக்கை ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் முதல் 2 லட்சத்து 50 ஆயிரம் வரையிலுமிருக்கலாம். இதனை ஜெர்மனியிலுள்ள பச்சை, நீல போலீசார்களோடு ஒப்பிடுவதே பொருந்தும்.

(2) இந்த சிவப்பு ராணுவம் போதுமான எல்லாவித இயந்திரங்களையும் தாங்கியிருப்பதோடு விசேஷமான பல கருவிகளையும் ஏராளம் பெற்றிருக்கின்றது. பொதுவாக இதர தேசத்து சேனையைவிட ரொம்ப மாறுபட்டிருப்பது இந்த சிவப்புச் சேனை.

(3) ஆனால் சோவியத் யூனியனுக்குள் எளிதில் இயக்கிவிடக் கூடிய சௌகரியம் பெற்றிருக்கவில்லை.

(4) இன்னும், சிவப்புச்சேனை மிகுந்த செல்வாக்குடையது; உரிமையும் பெற்றது. அதனை ஒரு பெரிய பாடசாலையென்றும் ஜீவிதம் முழுதுக்கும் பயிற்சி பெறும் ஆற்றலுள்ள ஸ்தாபனமென்றும் கூறலாம்.

## ஆரம்பம்

1918 ஜனவரி 15-ந் தேதி வெளியிடப்பட்ட திட்டமொன்றினால் சிவப்பு சேனை முதலில் தோற்றிற்று. அப்



போது அது ஒரு தொண்டர் கழகமாகவே இருந்தது. சில நாட்கள் செல்ல ஜப்பானியர் விலாடிவஸ்டாக்கில் சேனையைக் கொணர்ந்தனர்; ஜீக்கோஸ்லாவக்கில் கலவரம் உண்டாயிற்று. உடன் 1918 ஜூன் 17-ந் தேதி ஒரு சர்க்கார் உத்தரவைப் பிறப்பித்து அந்த தொண்டர் படையை ராணுவமாக்கினர். அது முதல் அப்படை இருந்தே வருகிறது. அப்பால் 1928 ஆகஸ்ட் 8-ந்தேதி 19 40 வயதிற்கிடைப்பட்ட திட தேகிகளான ஆடவரெல்லோரும் கட்டாயமாக சேரவேண்டுமென்று சட்டமியற்றப் பட்டது. ஆனால் பழைய பிரபுக்களின் பிள்ளைகள் குருக்கள், குற்றவாளிகள், ஓட்டுரிமையற்றவர்கள், பெரிய மிராசுதார்களின் புதல்வர்கள் முதலியோருக்கு இடம் தவிர்க்கப்பட்டது.

அந்த சிவப்புச் சேனையில் உத்யோகம் மூன்று தரப்பினதாம். (1) பூர்வாங்கப் பயிற்சி. (2) கடுமையாக வேலை பார்ப்பது (3) ரிசர்வாக இருப்பது. அதற்கு 21 வயது நிரம்பாத எவரும் எடுக்கப்பட மாட்டார்கள். மேற் சொன்ன மூன்று பகுதிகளிலும் அதற்குத் தகுந்தவாறு சர்வீஸ் இரண்டு வருடமோ மூன்று வருடமோ ஆக அமைக்கப்பட்டிருக்கிறது.

## சரியான பெயர்

சிவப்புச் சேனையின் சரியான பெயர் தொழிலாளிகள்—விவசாயிகள் சிவப்பு ராணுவம் என்பதாகும். இதற்குரிய ருஷ்யப் பதங்களின் முதலெழுத்தைக் கூட்டிச் சேர்த்து RKKA என்கின்றார்கள். இப்போது இந்த RKKA-ல் நூற்றுக்கு 40 விகிதம் தொழிலாளிகளும் 60 விகிதம் விவசாயிகளுமடங்கியிருக்கிறார்கள். 60 விவசாயிகளில் 10-ல் 9 கூட்டுப் பண்ணைகளிலிருந்து சேர்க்கப்படுகின்றனர். இவ்வாறு தொழிலாள வகுப்புகளிலிருந்து ராணுவம் சேர்க்கப்படுவதின் கருத்து லெனினால் ஆதியில் அடியில் வருமாறு விளக்கப்பட்டது:—

"நாட்டின் முதுகெலும்பாகிய தொழிலாளிகளிலிருந்து சேனை பொறுக்கி எடுக்கப்படுவதின் நோக்கம், மற்ற நாட்டிலுள்ள தம் சகோதரர்களை சுட்டுக் கொல்வதற்காக அல்ல; யுத்தத்தைத் தடை செய்வதும், வறுமையோடு போராடி வெற்றி பெறுவதும், கொள்ளை போவதை ஒழிப்பதுமே ராணுவத்தின் நோக்கம்."

கோவை சுந்தரம் டாக்கீஸாரால் சென்னை இமானுயல் கிளப் அங்கத்தினர்களைக் கொண்டு சென்னை ஸ்ரீ நிவாஸ சினிடோனில் தயாரிக்கப்படும் 'கபீர்தாஸ்' என்றதமிழ்ப் பேசும் படத்தில் கபீதாஸாக நடக்கும் ஸ்ரீ P. D. V. கிருஷ்ணன்.

10 வருடங்கட்குப் பிறகு இந்த சேனையைப் பற்றி ஸ்டாலின் அடியில் வருமாறு விளக்கிக் கூறினார்:—

(1) மற்ற நாடுகளின் சேனையென்பது முதலாளிகளுடைய கைக்கருவியாகும். ஆனால் சோவியத் ருஷ்யாவில் RKKA விடுதலைபெற்ற உழவர்களுடையவும் சுயேச்சையடைந்த தொழிலாளிகளுடையவும் ஓர் ஸ்தாபனம். அது உழைப்பவர்களின் உரிமையை நிலை நிறுத்தவும், மிராசுதார்கள், முதலாளிகள் ஆகியோரின் கொள்ளையை ஒழிக்கவும் அமைந்திருக்கிறது.

(2) வெளி நாடுகளில் (முதலாளிகளின் கருவியாகிய) ராணுவம் தளர்ந்த மற்றத் தேசங்களையும் குடியேற்ற நாடுகளையும் தாக்கும்பொருட்டு உபயோகமாகின்றது. ஆனால் RKKA பணக்காரர்களின் கொடுமையைத் தடை செய்வதற்காக ஏற்பட்டிருக்கிறது.

(3) வெளி தேசத்துச் சேனைகள் தேசாபிமான மென்பதால் நிறைக்கப்பட்டு, மற்ற அரசியல்களையும் மற்றத் தேச தொழிலாளிகளையும் வெறுக்கும், பகைக்கும், இயல்பு பெற்றிருக்கின்றன. ஆனால் RKKA சர்வதேச ஒற்றுமை, சர்வதேச சம்பந்தம், சர்வதேச தோழமை முதலியவை பெறுவதற்காகவே பழக்கப்படுகின்றது.

ஒவ்வொரு மே மாதம் 1-ந் தேதியிலும் தொழிலாளிகள் பிரகடனம் சிவப்புச் சதுக்கத்தில் நடைபெறும். அப்போது மிகுந்த ஆரவாரத்தினிடையே ராணுவத்தைச் சேரும் ஒவ்வொரு படைவீரனும் சத்தியம் செய்கின்றான். அந்த சத்திய வசனம் அடியில் காணப்படுவதாகும்:—

சோவியத் ஐக்கிய நாட்டுக் குடிகளாகிய தொழிலாளிகளின் புதல்வனாகிய நான் தொழிலாளிகள், விவசாயிகள் சேனையாகிய சிவப்பு ராணுவத்தில் ஒரு உறுப்பினனாக என்னை அமைத்துக் கொள்கிறேன். நான் தொழிலாளிகள் விவசாயிகள் அரசாங்கத்தில், சோவியத் பொதுவுடமை ஐக்கிய நாட்டின் பாதுகாப்புக்காக, உழைக்க வாக்குறுதி சொல்கிறேன்.

இத்தகைய வாக்குறுதி (சத்தியம்) ஏக காலத்தில் 30 ஆயிரம் பேர்களால் கொடுக்கப் படுவதைக் கேட்கையில் ஆச்சரியமாக விருக்கும். அந்த பெரிய தொனி கிரெம்லினிலிருந்து பிரதித்தொனியாக வருவது பெரிய விந்தை.

வெளி நாட்டிலிருந்து சோவியத் ருஷ்யாவுக்கு விஜயம் செய்திருக்கும் பெரிய ராணுவ சாஸ்திர நிபுணர்கள் எல்லாம் சிவப்புச் சேனையைப் பார்த்துவிட்டு, அதன் அமைப்பு, யுத்தக் கருவி முறை, பயிற்சி, நோக்கம் எல்லாம் உலகிலேயே நிகரற்றிருக்கின்றதென்று கூறுகின்றார்கள். ஆனால் பிரயாணத்திற்கு லாயக் கற்றதென்கிறார்கள்.

உணர்ச்சி

ஒவ்வொரு ருஷ்யப் பொதுவுடமைக்காரனும் நியாயமான உணர்ச்சியோடு தம் தேசத்திற்கு தொண்டாற்ற வேண்டுவது நிரம்ப அவசியமென்றும், அதற்கு சிவப்பு ராணுவத்தில் சேர்வதே நேர்மையும் மதிப்பு முடைய வழியென்றும் நம்புகிறான். ராணுவ வீரர்கள் மட்டிலுமல்ல, சோவியத் ஜனங்களே தேசத்திற்காக அந்த சேனையில் சேர்வது கவுரவம் என்று எண்ணுகின்றார்கள்.

இப்படி பொதுவுடமைக்காரர்கள் கூறுவது பிரயோஜன மற்றதல்ல. அவர்கள் சொல்வதற்கு நான்கு காரணங்களுண்டு. அவை:—

(1) உணவு, குடியிருக்க வீடு, ஆடை இவை அளிக்கப்படுகின்றன.

(2) பயிற்சியும் கட்டுப்பாடும் அமைந்திருப்பதால் நல்ல பிரசாரம் செய்ய இடமேற்படுகிறது.

(3) பலவிதமான கல்வி போதனை கிடைப்பதோடு, சங்கங்கள், விளையாட்டு வேனிற்கால உறைவிடங்கள், இளைப்பாறுமிடங்கள் ஆகியவை கிடைக்கின்றன.

(4) ராணுவ சர்வீஸ் விட்டு நீங்கினால் அவர்கட்கு நிலம் பதிவுசெய்து கொடுக்கப்படுகிறது அல்லது தொழில் கொடுக்கப்படுகிறது.

தன் தேசத்தைப் பாதுகாப்பது என்ற கருத்திருப்பதால் ஒவ்வொரு பொதுவுடமைக்காரனும் மனமார அச்சேனையைத் தாங்குகின்றான். ஸ்டாலின் அதற்கேற்றாற்போல,

"மற்றவர்களை தாக்கும் எண்ணம் கிஞ்சித்தும் கிடையாது. ஆனால் சோவியத் மண்ணின் கடைசி அங்குலத்தைக் கூட பாதுகாப்பதே நோக்கம்."

என்று கூறியது சேனையின் மூலமந்திரமா யிருக்கிறது.

சிறு குழந்தைகள் முதல் கொடுக்கப்படுகின்ற பயிற்சியில் மேற்படி தத்துவம் அடங்கி யிருப்பதால் எந்த சிறுவனும் சிறுமியும் சிவப்பு ராணுவத்தில் அபிமானம் கொள்கின்றான்.

# நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்

## வருஷாந்தக் கூட்டம்

ஜுலை 3உ மாலை சென்னை நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்தின் வருஷாந்திர கூட்டம் நடைபெற்றது. சங்கத் தலைவர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தலைமை வகித்தார். 33 அங்கத்தினர்கள் பிரசன்னமா யிருந்தனர். 1934-ம் வருஷம் இச்சங்கத்தின் கௌரவ காரியதரிசியாக விருந்த திவான்பகதூர் ஏ. வி. பி. எல். சிதம்பரம் செட்டியார் காலமானது பற்றி துக்கத் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. 1934 ம் வருஷ அறிக்கையும், கணக்கு விவரங்களும் வாசிக்கப்பெற்று நிறைவேறின. பிறகு நிகழும் வருஷத்திற்கு கீழ் கண்டவர்களை சங்கத்தின் நிர்வாகிகளாகத் தெரிந்தெடுத்தனர்:—

ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தலைவர்; தேவகோட்டை ஜமீந்தாரான திரு. ஏ.எல்.ஏ. ஆர். வெள்ளையன் செட்டியார் உப தலைவர்; ராவ்பகதூர் எஸ். ஏ. எஸ். ஆர். எம். ராமநாதன் செட்டியார் கௌரவ காரியதரிசி; திரு. சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் பொக்கிஷதார்; திரு. எஸ். ராமசாமி அய்யர் உதவி காரியதரிசி.

10 பேர்களை நிர்வாக கமிட்டியின் சாதாரண அங்கத்தினர்களாகத் தெரிந்தெடுத்தனர்.

இந்திய சர்க்கார் மசோதாவில் பர்மா இந்தியர் உரிமைகளைப் பாதுகாக்கும் விஷயத்தில் பர்மா இந்தியப் பிரதிநிதிகளுக்கு மிக்க உதவி செய்ததற்காக இந்தியா மந்திரியாக விருந்த சர் சாமியூல் ஹோர், உதவி இந்தியா மந்திரியான ஆர். ஏ. பட்லர், வைசிராய், சென்னை கவர்னர் இவர்களுக்கு வந்தனங் கூறுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது. இங்கிலாந்துக்குச் சென்று பர்மா இந்தியர் உரிமைகளை பாதுகாக்கும் விஷயத்தில் மிக்க பிரயாசை மேற்கொண்டதற்காக ராஜா சர். அண்ணாமலை செட்டியாருக்கும், திரு. கே. ராமநாதன் செட்டியார் முதலியவர்களும் நன்றி செலுத்துவதாக மற்றொரு தீர்மானம் நிறைவேறியது.

சங்க விதிகள் சம்பந்தமாக சில திருத்தங்கள் நிறைவேறியதும் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைந்தது.





பர்மாவுக்கு மேல் உள்ள ஷான் என்ற தேசத்துப் பெண்கள் கூடைக்கு முன் உட்கார்ந்து கல்லோ என்ற ஊர்ச்சந்தையில் வியாபாரம் செய்கின்றனர்.

மார்தளேக்குக் சமீபத்திலுள்ள மீங்கோன் என்ற ஊரிலிருக்கும் பிர்மாண்டமான மணி.

உணர்ச்சி

ஒவ்வொரு ருஷ்யப் பொதுவுடமைக் காரனும் நியாயமான உணர்ச்சியோடு தம் தேசத்திற்கு தொண்டாற்ற வேண்டுவது நிரம்ப அவசியமென்றும், அதற்கு சிவப்பு ராணுவத்தில் சேர்வதே நேர்மையும் மதிப்பு முடைய வழியென்றும் நம்புகிறான். ராணுவ வீரர்கள் மட்டிலுமல்ல, சோவியத் ஜனங்களே தேசத்திற்காக அந்த சேனையில் சேர்வது கவுரவம் என்று எண்ணுகின்றார்கள்.

இப்படி பொதுவுடமைக்காரர்கள் கூறுவது பிரயோஜன மற்றதல்ல. அவர்கள் சொல்வதற்கு நான்கு காரணங்களுண்டு. அவை:—

(1) உணவு, குடியிருக்க வீடு, ஆடை இவை அளிக்கப்படுகின்றன.

(2) பயிற்சியும் கட்டுப்பாடும் அமைந்திருப்பதால் நல்ல பிரசாரம் செய்ய இடமேற்படுகிறது.

(3) பலவிதமான கல்வி போதனை கிடைப்பதோடு, சங்கங்கள், விளையாட்டு வேனிற்கால உறைவிடங்கள், இளைப்பாறுமிடங்கள் ஆகியவை கிடைக்கின்றன.

(4) ராணுவ சர்வீஸ் விட்டு நீங்கினால் அவர்கட்கு நிலம் பதிவுசெய்து கொடுக்கப்படுகிறது அல்லது தொழில் கொடுக்கப்படுகிறது.

தன் தேசத்தைப் பாதுகாப்பது என்ற கருத்திருப்பதால் ஒவ்வொரு பொதுவுடமைக்காரனும் மனமார அச்சேனையைத் தாங்குகின்றான். ஸ்டாலின் அதற்கேற்றாற்போல,

"மற்றவர்களை தாக்கும் எண்ணம் இஞ்சித்தும் கிடையாது. ஆனால் சோவியத் மண்ணின் கடைசி அங்குலத்தைக் கூட பாதுகாப்பதே நோக்கம்."

என்று கூறியது சேனையின் மூலமந்திரமா யிருக்கிறது.

சிறு குழந்தைகள் முதல் கொடுக்கப்படுகின்ற பயிற்சியில் மேற்படி தத்துவம் அடங்கி யிருப்பதால் எந்த சிறுவனும் சிறுமியும் சிவப்பு ராணுவத்தில் அபிமானம் கொள்கின்றான்.

# நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்

## வருஷாந்தக் கூட்டம்

ஜுலை 3உ மாலை சென்னை நாட்டுக் கோட்டை நகரத்தார் சங்கத்தின் வருஷாந்திர கூட்டம் நடைபெற்றது. சங்கத் தலைவர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தலைமை வகித்தார். 33 அங்கத்தினர்கள் பிரசன்னமா யிருந்தனர். 1934-ம் வருஷம் இச்சங்கத்தின் கௌரவ காரியதரிசியாக விருந்த திவான்பகதூர் ஏ. வி. பி. எல். சிதம்பரம் செட்டியார் காலமானது பற்றி துக்கத் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. 1934 ம் வருஷ அறிக்கையும், கணக்கு விவரங்களும் வாசிக்கப் பெற்று நிறைவேறின. பிறகு நிகழும் வருஷத்திற்கு கீழ் கண்டவர்களை சங்கத்தின் நிர்வாகிகளாகத் தெரிந்தெடுத்தனர்:—

ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தலைவர்; தேவகோட்டை ஜமீந்தாரான திரு. ஏ.எல்.ஏ. ஆர். வெள்ளையன் செட்டியார் உப தலைவர்; ராவ்பகதூர் எஸ். ஏ. எஸ். ஆர். எம். ராமநாதன் செட்டியார் கௌரவ காரியதரிசி; திரு. சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் பொக்கிஷதார்; திரு. எஸ். ராமசாமி அய்யர் உதவி காரியதரிசி.

10 பேர்களை நிர்வாக கமிட்டியின் சாதாரண அங்கத்தினர்களாகத் தெரிந்தெடுத்தனர்.

இந்திய சர்க்கார் மசோதாவில் பர்மா இந்தியர் உரிமைகளைப் பாதுகாக்கும் விஷயத்தில் பர்மா இந்தியப் பிரதிநிதிகளுக்கு மிக்க உதவி செய்ததற்காக இந்தியா மந்திரியாக விருந்த சர் சாமியூல் ஹோர், உதவி இந்தியா மந்திரியான ஆர். ஏ. பட்லர், வைசிராய், சென்னை கவர்னர் இவர்களுக்கு வந்தனங் கூறுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது. இங்கிலாந்துக்குச் சென்று பர்மா இந்தியர் உரிமைகளை பாதுகாக்கும் விஷயத்தில் மிக்க பிரயாசை மேற்கொண்டதற்காக ராஜா சர். அண்ணாமலை செட்டியாருக்கும், திரு. கே. ராமநாதன் செட்டியார் முதலியவர்களும் நன்றி செலுத்துவதாக மற்றொரு தீர்மானம் நிறைவேறியது.

சங்க விதிகள் சம்பந்தமாக சில திருத்தங்கள் நிறைவேறியதும் வந்தனோபசாரத்துடன் கூட்டம் கலைந்தது.



மாந்தளேக்குக் சமீபத்திலுள்ள மீங்கோன் என்ற ஊரிலிருக்கும் பிரமாண்டமான மணி.



பர்மாவுக்கு மேல் உள்ள ஷான் என்ற தேசத்துப் பெண்கள் கூடைக்கு முன் உட்கார்ந்து கல்லோ என்ற ஊர்ச்சந்தையில் வியாபாரம் செய்கின்றனர்.



பர்மாவில் சைட்டோ என்ற ஊரிலுள்ள அழகிய மலை.



கோயம்புத்தூர் செல்லம் டாக்கீஸ் கம்பெனியார் தாயாரித்து வரும் 'லங்கா தகனம்' என்னும் தமிழ்ப்பேசும் படத்தில் ஒரு காட்சி.



ஓர் பர்மியப் பெண்.





கோயம்புத்தூர் சுந்தரம் டாக்கீஸ் கம்பெனியார் தயாரித்து வரும் "கபீர்தாஸ்" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி.




நெல் ஏற்றிச் செல்லும் படகும், நெல் ஆலையும். பர்மிய நதிகளில் இத்தகைய படகுகள் செல்வது மனோகரமான காட்சி.




மரக்கடைகளில் யானை வேலை செய்யும் முறை. பர்மிய மர வியாபாரத்திற்கு பெரிய உதவியாயிருப்பது யானைகள்தாம்.




கோயமுத்தூர் டாக்கீஸாரால் தயாரிக்கப்பட்டுவரும் "ராஜாம்பாள்" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி.




தண்ணீரில் மிதக்கப் போட்டுக்கொண்டு வரப்படும் தடிகளை யானைகள் இழுத்து மா டிபோவில் அடுக்கி வைக்கின்றன.

# சீனாவில் அபின் கலாட்டா

(ஆர்னால்டு ரசல்)

சீனர்கட்கு வேடிக்கை பார்க்கும் குணம் அதிகம். அபின் அருந்துவதை கெடுதி செய்யும் தலைவிதி என்று நினைப் பதைவிட ஒரு வேடிக்கையான கூத்து என்று நினைக்கின்றார்கள். எந்த சீன னும் தம்மினத்தாரின் வாயில் இங்கி லீஷ்காரர்கள் அபினை புகுத்தி வந்திருப் பதை அறியாமலில்லை. சீனாவின் மொத்த ஜனத்தொகையில் கால்பாகம் பேர் (25%) அபின் அருந்துபவர்.

• • •

அபின் அருந்துவது, சந்தோஷ முகம் காட்டாத வாழ்க்கையின் ஓர் அறிகுறியாகும். பொதுவாக பணக்கார வகுப்பாரைவிட ஏழைகளே அதிகமாக அபின் சாப்பிடுகிறார்கள். ஆசியா கண்டத்தில் நல்ல மழை, பெரு வெள் ளம், வறுமை, உடலைப் பாதிக்கும் சீதோஷ்ணம் முதலியன விருந்தாலும் ஐரோப்பாவைவிட அதிகம்பேர் அபி னருந்துகிறார்கள். மூலிகை சம்பந்த மான குணம் அதில் குறைவு; ஆயினும் சீனர்கள் சாப்பிடுவது கிரம்ப.

தொழிலாளிகள் பலர் அபின் தின் றால் சுறு சுறுப்புண்டாகுமென்று நினைந்து அதனை சாப்பிடுகிறார்கள். தனி யான வாழ்வு அபினுண்ணுங் குணத்தை அபிவிருத்தி செய்யக்கூடும். வெகு தொலையிலிருக்கும் 'ஔட் போஸ்ட்'களில் காவல் காக்கும் பட் டாள வீரரும், சப்பர் காடு, ஈய சுரங் கம் முதலியவைகளில் கடுமையாக வேலை செய்து வரும் தொழிலாளி களும் அபினை மனதைக் குளிர்விக்கும் ஒரு மருந்தாக மதித்து உபயோகிக் கிறார்கள்.

மனித சரீரத்தில் அபின் என்னென்ன நன்மை தீமைகளை உற்பத்தி செய்யும் என்கின்ற விஷயத்தில் பல மாதிரி அபிப்பிராயம் சொல்லப்படுகிறது. சாதா ரணமாக அபின் புகைப்பதில் ஈடுபட் டிருக்கும் சிலர் நெடுநாள் ஆரோக்கிய மாக வாழ்ந்ததை ஆதாரமாகக் கொண்டு பலவாறு புகழ்கின்றார்கள். கீழ் நாட் டுத் தொழிலாளிகளில் அபின் உபயோ கிக்கும் தொழிலாளிகட்கும் உபயோ கியாத தொழிலாளிகட்கும் எவ்வித வித்தியாசமுமில்லை என்று சொல்லு கிறார்கள்.

பொதுவாக அபினுண்ணுவாரை நோக்கினால் நாள் போகப்போக அபி னின் அளவைப் பெருக்கி பெருக்கி கடைசியில் நடுத்தர அபின் பிரியர்கள் என்ற பெயருக்கே லாயக்கில்லாமல் போய் விடுகின்றார்கள் என்றும் காண லாம். அப்படிநிதானம் கெட்டுப்போய் விட்டால் அதற்கு அடிமையாகி விடு



கொண்டால் அரசர்.
குவெட்டா பூகம்பக் கஷ்ட நிவாரணத்திற் காக ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை அளித்துள்ளார். -Cou.

வதுசகஜம். அடிமையாகி விட்டால் வாழ்க்கை சீர்கெட்டு, குடும்பம் பாழாகி, உடல்நிலை அழிந்து, புத்திபேதலித்து, லட்சியம் தொலைந்து அதோகதி நெருங்கி விடும். அபின் தின்பார் பெரும்பான்மையும் கீழ்தர மக்களி டையேயே கண்டு வருவதால் நாளடை வில் அவர்களால் அபினுக்குப் பணம் தேடவும், தம் போஷணைக்குப் பொருள் ஈட்டவும் முடிவதில்லை. ஆதலால் உடல் கெட்டுப் போவதோடு பலவித தூர்க்கரு மங்களில் ஈடுபட வேண்டியவர்களாகின் றனர்.

• • •

இன்று அபின் உண்ணும் பைத் தியம் சீனாவில் வேரூன்றியிருந்தாலும் ஆதியில் அபின் விளைந்தவிடம் சீனாவை விட இங்கிலாந்துக்கே சமீபமிருக்கிறது. அபின் பாப்பி என்ற செடியிலிருந்து தயாரிக்கப்படுவது என்பது நேயர் கட்குத் தெரிந்திருக்கலாம். அந்த செடி பல நூற்றாண்டுகளாக ஏஷ்யா மைனர் என்ற தீவகற்பத்தில் ஏராள மாக வளர்ந்திருந்தது. நெடுநாளாக அதனை வியாபாரத் துறையில் கொண்டு வரவில்லை.

## இந்தியாவில் அபின்

இந்தியாவில் அபின் முஸ்லிம் அரசர் கள் காலத்தில்தான் புகுந்தது. பின் னாளில் அது நாடுமுழுதும் பரவியதும், வியாபார நோக்கத்துடன் புகுத்தி, மக மதீய வர்த்தகர்கள் இமாலய மலை யைக் கடந்து சீனா, துருக்கிஸ்தானம், காஸ்கர் முதலிய தேசங்கட்கு எடுத் துச் சென்றனர். அங்கு ஜனங்கள் முதலில் மருந்தாகவே அதனை உபயோ கித்தார்கள்; அப்போது எந்தவிதமான கெடுதியும் ஏற்பட்டிருக்கவில்லை. சுமார் 17-வது நூற்றாண்டு வரையிலும் அபின் குடிக்கும் வழக்கம் சீனாவில் பரவவில்லை என்று கூறலாம்.

• • •

முதலில்—மகமதீய வியாபாரிகள் அபின் வியாபாரம் செய்த காலையில்— சீனாவுக்கு, கரை மார்க்கமாக, கஷ்டப் பட்டு, காடுகளினிடையே, செல்ல வேண்டியிருந்ததால் அபின் அவ் வளவு ஏராளமாக சீனாவில் பரவி விட்டது என்று கூறிவிடுவதற்கில்லை. ஆனால் பின்னாடி ஐரோப்பிய ஜாதி யார் தோன்றி கப்பலோட்டு வியா பாரத்தை விஸ்தரித்ததும் அபின் ஏரா ளமாக சீனாவுக்குள் புகலாயிற்று. அந்த வியாபாரத்தை முதலில் செய்த ஐரோப்பியர் போர்த்து கேசியர்கள் ஆவர். 18-வது நூற்றாண்டின் தொடக் கத்தில் போர்த்து கேசியர் வருடா வருடம் 200 பெட்டி அபினை சீனாவில் இறக்குமதி செய்தார்களென்று தெரி கிறது. அதுகாலை சீன சக்ரவர்த்தி யங் செங் என்பவர் அபின் அருந்தும் தீமையை விளக்கி பல சாசனங்களை வெளியிட்டார். அத்தகைய சாசனங்

களின் முதலாவது நம்பர் 1729 A. D. யில் வந்திருக்கிறது.

* * *

கிளைவ் பிளாசியில் அடைந்த வெற்றி அபின் சரித்திரத்தில் ஒரு முக்கியமான சம்பவமாகும். கிளைவின் வெற்றி ஆங்கிலேயர்கட்கு மொகலாய சாம்ராஜ்யத்தில் விளைந்த அபின் முழுதுக்கும் குத்தகை உரிமையைக் கொடுத்தது. எனவே ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் அபின் செடியை (பாப்பியை) சால்திரியமான விவசாயத்திற்குக் கொண்டு வந்து அபிவிருத்தி செய்யலானார்கள். அப்பால் 15 வருடங்களுக்குப் வியாபார மேற்பார்வை உரிமையையும் தமதாக்கிக் கொண்டார்கள். 1776-ல் வெளியான வருட அறிக்கையின்படி இந்தியாவிலிருந்து அவ்வருடம் 1000 பெட்டி அபின் சீனு சென்றிருப்பதாகக் தெரிகிறது. 1890-ல் 5000 பெட்டிகள் சென்றதாக சொல்கின்றது.

இவ்வாறு வெள்ளைக்காரர்கள் சீனுவுக்கு அபினை ஏற்றிச் சென்று மக்களை தூங்குபவர்களாகவும், செயலற்றவர்களாகவும், கவலையுற்றவர்களாகவும் திருத்தியமைப்பதைக் கண்டதும் சீன சர்க்கார் விழித்துக் கொள்ளலானார்கள். அபின் சாப்பிடுவது சட்டப்படி பெரிய குற்றமென்றும், மீறி சாப்பிடுபவர்கள் தண்டனைக் குள்ளாவார்களென்றும் சட்டமியற்றப்பட்டது. அச்சட்டத்தை மீறிய சிலர் நாடு கடத்தப் பட்டார்கள்; சிலர் மரணதண்டனைக்கு ஆளானார்கள்.

சீனுவுக்குள் அபின் இறக்குமதி செய்யப்பட்டதால் சீனு, ஆரோக்கியத்தையும் அறிவையும் இழந்ததோடு நில்லாது நாட்டிலுள்ள வெள்ளி முழுதும் வெளியேறிபோகும் பெரும் நஷ்டத்தையும் கண்டார்கள். அபினை இறக்குமதி செய்துவிட்டு பதிலாக வெள்ளியைக் கொடுக்கவேண்டி யிருந்தது. ஆகவே நாட்டின் பொருளாதார நிலைமை நாளுக்கு நாள் குன்றிக் குன்றி வாலாயிற்று.

இந்தக் கெடுதியும் ஒரு பால் தலைகாட்ட, சீன சர்க்கார், சட்டத்தோடு மட்டும் நில்லாது 'பலசாலி' என்று பட்டப்பெயர் கிடைக்கப்பெற்ற லியூ—ஜீ—சூ என்ற வீரனை காண்டன் நகருக்கு அனுப்பி, அபின் வியாபாரத்தை அழிக்கும்படி தூண்டினார்கள். லியூ

காண்டனில் அபின் வியாபாரம் அதிகமாகச் செய்து வருபவர் ஆங்கிலேயர்கள் என்றும், அவர்கள் (அவ்வாங்கிலேயர்) திருட்டுத்தனமாக அபினை கப்பலில் கொணர்ந்து, கப்பலை முத்து ஆறு (Pearl River). என்ற நதியில் நிறுத்தி, அதிலேயே கடைகள் போல் அபினை விற்று வருகின்றார்களென்றும் கண்டு பிடித்தார். உடன் எல்லா கப்பல்களையும் ஆற்றிலிருந்து அப்புறப்படுத்த உத்தாவிட்டார். அவ்வுத்தரவுக்கு சிலர் அடங்கவில்லை. ஆகவே 20 லட்சம் பவுன் பெறுமானமுள்ள அபின் அழித்தொழிக்கப் பட்டது.

* * *

இந்த நஷ்டமேற்பட்டதும் கிரேட் பிரிட்டன் ஆங்கிலேயருக்கு உதவி செய்ய விரைந்தோடி வந்தது. அதனால் தகராறு ஏற்பட்டது. தகராறின் இறுதியில் பிரிட்டிஷாரும் சீனரும் ஒரு உடன்படிக்கை (நாங்கிங் உடன்படிக்கை)யை செய்துகொண்டனர். அவ்வுடன்படிக்கைப்படி இங்கிலாந்துக்கு ஹாங்காங் கிடைத்தது. ஹாங்காங் தான் முத்தாற்றின் முகத்துவாரப் பிரதேசம். ஆதலால் காண்டன் துறைமுகமும் ஆங்கிலேயர் கையில் புகுந்துவிட்டது.

இங்ஙனம் தகராறும் சமாதானமும் வந்து உடன்படிக்கை ஏற்பட்டதேயல்லாது அபின் பிரச்னைபற்றி எந்த முடிவும் ஏற்பட்டு விடவில்லை. 1860-ல் ஆங்கிலேயரும்—பிரஞ்சுகாரர்களும் சேர்ந்து பீக்கிங் நகரின்மீது படையெடுத்துச் சென்று கடைசியில் டியண்ட்சின் உடன்படிக்கை என்ற ஒரு உடன்படிக்கையை எழுதி வாங்கி அதன்படி, அபின் இறக்குமதித் தடை நீக்கப்பட்டது. ஆகவே விதேசியர் சுங்கம் செலுத்திவிட்டு அபினை இறக்குமதி செய்யத் தொடங்கினர்கள். 1850-ல் 60 ஆயிரம் பிக்கல் அபின் சீனுவில் இறக்குமதி செய்யப்பட்டதாம். 1890-ல் சீனு வந்த அபினின் கணக்கு 1 லட்சம் பிக்கல். சீன சர்க்கார் மீண்டும் அபினுல் நாடு அழிகிறது என்று கண்டார்கள். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக அபின் வரத் தொடங்கியதோ அவ்வளவுக்கவ்வளவு புகை பிடிப்பவரும், அருந்துபவரும் அதிகப்பட்டார்கள். எனவே தேசம் மீண்டும் தடையுத்தரவு போடவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

அந்த வேளையில் மஞ்சு பரம்பரை என்ற அரச வம்சம் அழியத் தொடங்கி நாட்டில் சீர்கேடு தலைகாட்ட ஆரம்பித்திருந்தது. பல உத்தியோகங்கள் விலைக்கு விற்கப்பட்டன; உத்தியோகஸ்தர்களெல்லாம் லஞ்சம் வாங்குபவரானார்கள். எந்த உத்தியோகஸ்தனும் பதவியை ஏற்றதும் தான் கொடுத்த பணத்தையும் அதற்குமேலும் ஜனங்களிடை வரிப்போட்டு வாங்கிவிட முயன்றான். அபின் செடிதான் அந்த





நாளையில் வரி விதிப்பதற்கு ஏற்ற பயிர். ஆகவே உத்தியோகஸ்தர்களே அபின் கிருஷியை ஆதரித்து அபின் விருத்தி செய்யலானார்கள். 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சீனுவில் அபினை சாகுபடி செய்யாத எந்த ஜில்லா ஜில்லாவும் இருக்க வில்லை. இந்த நிலைமை வந்ததும் வெளி நாட்டு அபினின் தேவை குறைவுற்று உள்நாட்டு அபின் அதிகம் வழங்கப்படலாயிற்று.

இந்த மாற்றம் சீனுவில் அபின் அருந்தும் வழக்கம் ஆணியடிக்கப்பட்டதுபதற்கு ஏற்ற ஒரு நல்ல உதாரணமல்லவா?

பின் கொஞ்சக் காலம் சென்றதும் விழித்துக் கொண்ட முன்னேறும் அரசியல் குழாங்கள் பத்து, பல பகுதிகளிலுமிருந்து சந்தித்து, 10 வருஷத்தில், வருடம் பத்தில் ஒன்று விகிதம் குறைத்து அத்தனையையும் அழித்து விடுவது என்று ஒரு திட்டம் செய்தார்கள். அந்தத் திட்டம் அமலில் வரவும் பலமான பிரசாரம் செய்யப்பட்டது. 1910ல் நல்ல வேளையாக ஜெக்வான் என்ற மாகாணம் அறவே அபின் பயிரை கைவிட்டது. அந்த மகாணம் தான் மொத்த அபினில் 60 சதவிகிதத்தை பயிர் செய்து காட்டிய பகுதி. அங்கு அபின் ஒழிந்ததும் தேசம் எடுத்த காரியம் நடை பெற்று விட்டதென்று பொருள்கொள்ளலாயிற்று அந்த சந்தோஷம் நீளு முன்பு புரட்சிகள் தோன்றலாயின. அரசியல் மாற்றத்தை முன்னிட்டு ஜனங்கள் தத்த மக்குள்ளேயே போராடுகின்றார்கள். போராட்டமென்றால் சீக்கிரத்தில் அரசியல் மாறுபாடு ஏற்படுதலென்பது பொருள். அந்த மாறுபாடு ஏற்பட்டால் தான் அபின் அறவே ஒழியும். இப்போது புரட்சிக் காரர்கள் அபினுக் கெதிராக பலமான வேலை செய்கிறார்கள். இன்னும் சில வருடங்கட்குள் புரட்சி இளைஞர் ஆட்சி நிலவப் போவதும் அபின் ஒழிந்து நல்வாழ்வு (சீனுவில்) தலைகாட்டப் போவதும் நிச்சயம்.

—

# ஆயு வேத வைத்தியம்

## கற்பிப்பதென்ன?

ஆயுர்வேத வைத்திய சாஸ்திரம் மனிதனுக் கேற்படும் பற்பலவித நோய்களை பரிகரிப்பதற் கென்னென்ன வழிகள் என்று விளக்கிய தோடமையாமல் மனோ வியாதிகள் பலவற்றையும் தெளிவு படுத்தியுள்ளது. வைத்தியம் காக்கா வலிப்பு, சித்தப்பிரமை முதலியவற்றிற்கு நிவாரண மார்க்கங்கள் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அதிலும் விசேஷமாக எல்லா நோய்களுக்கும் ஆரம்பகமானதாயிருக்கும் மனோ நிலைமைகளை அறிவுறுத்துவதில் நிரம்பக் கவனம் செலுத்தியுள்ளது. காமம், வெகுளி, மயக்கம் இம் மூன்றின் நாமம் கெடக்கெடும் நோய்' அன்றோ? அதனையொப்புக்கொண்டு, ஆசை, பசி, பொறுமை, தற்பெருமை, சூழ்ச்சி முதலிய தீய குணங்களை ஆங்காங்கே கண்டித்துக் கூறுகிறது. மேற்படி குணங்கள் அதிகப்பட்டு விட்டால் இரத்தம் கெட்டு விஷத்தன்மை பூண்டு விடுவதோடு, சித்தப்பிரமை, நெஞ்சு துடிப்பு அடங்குதல், நித்திரையின்மை, அஜீரணம் முதலிய நோய்கள் தலை காட்ட ஆரம்பிக்கும். இத்தகைய நோய்க்காளானவர்களை கவனமாக பாதுகாக்க வேண்டுமென்று ஆயுர்வேதம் வைத்தியர்கட்கு இடித்துக் கூறுகிறது.

ஒவ்வொரு மனிதனுடையவும் சுபாவங்களையும் மனப் போக்குகளையும் தெரிந்து செய்யப்படவேண்டிய வைத்திய முறை ஆயுர்வேதத்தில் ஓர் முக்கிய பகுதியாகும். இந்தக் காலத்தில் வைத்திய மாணவர்கள் உடற்கூற்றை நன்கு கற்று உடலில் எந்தெந்தப் பகுதிகளில் என்னென்ன உறுப்புகளிருக்கின்றன; அவற்றின் வேலை என்னென்ன, அவற்றைப் பாதுகாக்க வேண்டிய வழிகள் எவ்வெவை என்று நன்கு கற்றுக் கொள்கின்றனர். ஆனல் ஆயுர்வேத மாணவர்களோ உடற் கூற்றைப்பற்றித் தெரிந்திருப்பதோடு, மனிதனின் மானசீக இயற்கைகளையும் தெற்றெனத் தெரிந்திருந்தார்கள். ஆகவே தற்கால படிப்பு, ஆயுர்வேத ஞானம் இரண்டையும் ஒப்பிடும்போது பின்னது சாலவும் ஏற்றமுடையது என்று தெரிந்து கொள்ளலாம். இதனை உணர்ந்து தற்கால வைத்தியப் படிப்பில் சில மாற்றங்கள் செய்து கொள்வது நியாயமானதாகும்.

மனித உடம்பு இரு பகுதிகளையுடையது. ஒன்று ஸ்தூலசரீரம் (Physical body) இரண்டு சூக்ஷ்மசரீரம் (Subtle body). இவ் விரண்டிலும் ஒன்றையொழித்து மற்றொன்றினால் வாழ முடியாது. தற்கால வைத்திய மாணவர்கட்கு சூக்ஷ்ம சரீரத்தின் முக்கிய பகுதி (சக்ரம்) எங்கிருக்கிறது என்று கூட தெரிந்துகொள்ள முடியாது. தியானம், யோகம், ஏகாக்ர சித்தம் முதலியவைகளே சூக்ஷ்ம சரீரத்தின் இயல்பை அறியும் ஆற்றல் பெறும்.

மனித சரீரத்தில் பிராணன், உதானன், வியானன், சமானன், அபானன் என்ற ஐந்து வாயுக்கள் இருப்பதாகவும் அவை முறையே தலை, மார்பு, இருதயம், இரப்பை, மலஜலப்பை ஆகியவற்றில் இருப்பதாகவும் சொல்லப்படுகின்றது. இவ்வாயு நிலைகள் மேற்சொன்ன ஐந்து கன்றுக்குப் புலனாகும் உறுப்புகளல்ல. நமது தற்கால வைத்திய சாஸ்திரத்தின் உச்சஸ்தான அறிவைக்

ஊழியன் சந்தா.

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ. | 6-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3-0-0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5-0-0 |

காரியஸ்தர்,
ஊழியன் ஆபீஸ்,
56, தம்புசெட்டித் தெரு,
சென்னை.

கொண்டு ஆராய்ந்து பார்த்தாலும் அவ் ஐந்து இடங்களையும் கண்டுபிடித்துவிட முடியாது. நிதானித்துச் சொன்னால் தற்கால சாஸ்திரத்திற்கு மேற்படி உறுப்புக்கள் எவ்வாறு வேலையைச் செய்ய ஆரம்பிக்கின்றன வென்பதே தெரியாது. அந்த ஞானத்தைப் பெற வேண்டுமானால் ஆன்ம ஞானமடைய வேண்டும். ஆன்ம ஞானம் உடம்பை அறுத்துப் பார்ப்பதாலோ துளைத்து நோக்குவதாலோ வந்துவிடுவதல்ல. தபோபலமே அவ்வறிவைக் கொடுக்கும் ஆற்றல் பெற்றது. ஆயுர்வேத சாஸ்திரிகளெல்லோரும் தவசிகள் தான். அவர்கள் மன சக்தியினால்தான் வைத்ய சாஸ்திரம் கண்டார்கள். அந்த முனிவர்கள் மேற்படி பஞ்ச வாயுக்களும் சாரீர உருவமுடையன வல்லவென்றும், கண்ணினால் கண்டுவிட முடியாதவை என்றும் சொல்கின்றனர்.

(ஸ்ரீ லக்ஷ்மிபதி விசாகப்பட்டணத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு).

## சிறுகூடற்பட்டி

### பாரதமாதா வாசகசாலை

### உத்தியோகஸ்தர்கள் தேர்தல்

நிகழும் யுவ ஆண்டு ஆனித் திங்கள் பதினேழாம் நாள் (1-7-35) மாலை 5 மணிக்கு திரு. பெரி. பெ. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் வாசகசாலையில் ஒரு கூட்டம் நடைபெற்றது.

கீழ்க் கண்டோர் புது வருடத்திற்கு உத்தியோகஸ்தர்களாக ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

(1) திரு. அரு. நா. நாராயணஞ் செட்டியாரவர்கள் (தலைவர்).

(2) ... ச. வினைதீர்த்தான் (காரியதரிசி).

(3) வெ. சுப்பிரமணியன் (உபகாரியதரிசி).

(4) வீர. கருப்பஞ் செட்டியாரவர்கள் (பொக்கிஷதார்).

(5) ஆத. மு. அண்ணாமலை செட்டியாரவர்கள் (கணக்குப் பரிசோதகர்).

நிர்வாக சபை அங்கத்தினர்கள்

(6) வீர. சி. பெரியகருப்பஞ் செட்டியாரவர்கள்.

(7) அ. வெ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்.

(8) அ. பழ. கரு. வெங்கிடாசலஞ் செட்டியாரவர்கள்.

(9) வெ. ராம. அண்ணாமலை செட்டியாரவர்கள்.

(10) ஆத. வீர. ஆதப்ப செட்டியாரவர்கள்.

(11) வீர. மு. இராமனாதஞ் செட்டியாரவர்கள்.

பின்னர் சென்ற ஆண்டில் தொண்டாற்றி வாசகசாலையைச் சிறப்பாக நடாத்திய பெரியோர்கட்கும் சபைத் தலைவர்க்கும் சபையோர்க்கும் வந்தனங் கூறப்பெற்று மாலை 6-30க்கு கூட்டம் கலைந்தது என S. S. V. அறிவிக்கிறார்.



கோட்டையூர் கவீ. அள. அள. மு. அழகப்ப செட்டியார் என்ற இளைஞர் ஜூன் கடைசி வாரத்தில், குற்றாலம் ஐந்து அருவி ரோட்டின் பக்கத்தில் உள்ள வெண்ணெய் மடையில் கால்நடைகளுக்கு மிக்க உபத்திரவம் இழைத்துக்கொண்டிருந்த 7 அடி நீளமுள்ள பெரிய புலி ஒன்றை துணையில்லாமல் தனியே இருந்து இரவு நேரத்தில் ஒரே வேட்டில் சுட்டுக் கொன்றார். இதுவரையிலும் அந்தப் பகுதியில் சுடப்பட்ட புலிகளில் அது பெரியதென்று சொல்கிறார்கள். ஜில்லா அதிகாரி முதலிய பலர் திரு. அழகப்பாவை மெச்சினார்கள். துப்பாக்கியுடனிருப்பவர் திரு. அழகப்பா.



# சகோதரி கங்கா B. A.

## ஸ்ரீமதி சரோஜாவுக்கு உபதேசம்

கங்கா B. A. என்ற கையெழுத்துடன் அடியில் வரும் நீண்ட கடிதம் கிடைத்தது. யாரோ பீச்சில் போட்டிருக்கிறார்கள்—இந்த கடிதம் யாரோ தனிப்பட்ட ஒருவருக்கு வரையப்பட்டதானாலும் ஸ்ரீமதி கங்கா B. A. கூறுபவை எந்த புருஷனும் பெண்ணும் அவசியம் தெரிந்திருக்க வேண்டுவனவாகும். அவர் மிக ஆராய்ச்சியோடு தங்கைக்கு உபதேசம் நல்குகிறார். இது வாசகர்கட்கு அறிவூட்டுவதாயிருக்குமென்று பிரசுரிக்கப் படுகிறது :—

சென்னை
3-6-19....

அன்புள்ள சரோஜா,

நீ ஸ்கூல் பைனல் வரைப் படித்திருந்தும், நிரம்ப அழகும் ஆஸ்தியும் அடைந்திருந்தும், ஒரு தகுதியான வானுக்கு வாழ்க்கைப் பட்டும், குடும்ப வாழ்வில் ஒப்புக் கொள்ளத் தகுந்த முறையில் இருக்கவில்லை என்பதைப் பல நாட்களாகக் கேள்விப்பட்டு நான் தெரியாதவள் போலிருந்து வந்தேன். நாட் போகப்போக சும்மாவிருப்பதில் சுகமில்லை யென்று தோற்றுவதோடு உனக்கு ஏதேனும் புத்திமதி கூற வேண்டுவது அவசியமென்றும் உணருகிறேன். நேற்று பங்கஜம் எனக்கெழுதிய கடிதத்தில், உன் கணவன் உன்னை பெற்றோர் வீட்டில் கொண்டு விட்டு விட்டு, தனியாக தஞ்சையில் தங்கி வருகின்றாரென்றும், தனிவாழ்க்கையினாலேற்படும் இடைஞ்சல்களையெல்லாம் குறைவற அனுபவித்து வருகின்றாரென்றும் விளக்கப்பட்டிருக்கிறது. ஒரு மனிதன் தனிவாழ்வில் இன்பமில்லை யென்று கண்ட பின்னரும் மனைவியை போக விட்டுவிட்டு 'ஒண்டி'யாய் வாழவேண்டுமென்றால் அவனுக்கு மனைவி மீது எவ்வளவு வருத்தமிருக்க வேண்டும்? அவ்வளவு வருத்தத்திற்கு சரோஜா! நீ உடந்தையாயிருப்பதை நினைக்கையில், என் மனம் வேகின்றது. எனக்குத் தெரிந்தவரையில், நீ பல வழிகளில் தப்பாக நடந்திருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

உன் கணவன் உன்னை வீட்டுக்கு அனுப்பி எத்தனை நாளாயின? இன்று வரையிலும் ஒரு கடிதமாவது எழுதி உன் பிழைகளை ஒப்புக்கொள்ளவாவது—இல்லை. அவருடைய க்ஷேம லாபங்கள் எப்படி யிருக்கின்றன என்று தெரியவாவது முயன்றாயா? மேலும் மேலும் பிடிவாதமும் முரட்டுத்தனமும் தான் காண்பிக்கின்றாயே தவிர, வளைந்து பணிந்து வந்ததாகத் தெரியவில்லை. சரோஜா, நான் இதனை எவ்வளவு வருத்தத்துடன் எழுதவேண்டி யிருக்கிறது? மேற் சொன்ன பதங்களை உபயோகிக்கவே நான் வருத்தப் படுகிறேன். உன்னை மாமி எவ்வளவு செல்வமாக வளர்த்தாள்; பாதுகாத்தாள்; பராமரித்தாள்! அப்படிப்பட்ட உனக்கு ஒரு நல்ல புருஷனுடன் ஒன்றி வாழத் தெரியவில்லையே!

புருஷனுக்குக் கடிதமெழுதாமலிருப்பதென்றால் மனத்தில் அன்பில்லை என்பதன்றோ பொருள்? உண்மையான அன்பு இருக்குமானால், ஒரு கணமாவது, வெளியூரில் தனி யிருப்பார் க்ஷேமத்தை விசாரியாம லிருப்பாயா? எங்கு அன்பில்லையோ அங்குதான் கடிதமும் இல்லை.

நீ கல்யாணமாகி இத்தனை நாளாகியும் புருஷனின் மனோ நிலைமையை அறிந்துகொண்டாயில்லை. அது ஒரு பெரிய தவறு. தன் துணைவனின் தன்மையை உணராத பெண் இன்பமாய் வாழமுடியாது. புருஷனின் விருப்பு வெறுப்பு, சுகதுக்கம், வேடிக்கை தமாஷ் இவற்றை யெல்லாம் குறைவற உணர்ந்துகொண்டாலல்லது அவனுக்கு இன்பமூட்ட முடியாது; எனவே தனக்கும் மகிழ்ச்சியடைய ஏலாது போய்விடும். எந்தப் பெண்ணும் திருமணம் செய்யப்பட்டால் உடன் செய்ய வேண்டுவது கணவனைப் படிப்பதாகும். அதே போல ஒரு முதலாளியின் கீழ் உத்யோகத்திற்குச் செல்பவரோ, ஒரு தலைமை அதிகாரியிடம் ஒத்துழைக்க விரும்புவரோ ஒரு கன்னியமானவருடன் நட்பாயிருக்க விரும்புபவரோ யாராயினும் சரி, முதலில் (தம் மேலே யிருப்பவரை) நன்கு படித்துக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட பாடம் படியாதவன் (படியாதவள்) யாராயிருந்தாலும் சரி, வாழ்க்கை யென்னும் பரீட்சையில் தேறிவிட முடியாது.

சரோஜா, நீ மிகுந்த அழகுடையவள் என மமதை கொண்டிருப்பதாய் சுற்றத்தார் சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். அத்தகைய மனப்பான்மையை பெற்றிருந்தால் உன்னை அதிகமாகக் கண்டிக்கிறேன். அழகு ஒரு மேலான பொக்கிஷம் தான். ஆனால் தகுதியான நற்குணமில்லா விட்டால் அது சோபியாது. குண அழகுதான் வடிவழகை விட விசேஷம். வடிவழகிருந்து குண அழகு கெட்டிருந்தால் அப்படிப்பட்ட அழகு வேண்டவே வேண்டாமென்று சிபார்சு செய்வேன். கெட்ட குணமும் நல்ல அழகும் பெற்றிருப்பது மாபெரும் அபாயமாகும். சிங்கம் ஒரு அழகான பிராணி. ஆனால் யாராவது அதனிடம் நெருங்கவும் விரும்புகிறார்களா? இல்லை. காரணம் அதன் கெட்ட குணந்தான். பாம்பு படமெடுத்தாடும்போது பார்க்க அழகாயிருக்கின்றது. ஆனால் அதனிடமிருக்கும் விஷத்தை உணர்வோர் அதன் ஆட்டத்தைப் பார்க்கவேனும் இசைகின்றார்களா? எவரும் நாடுகின்றார்களில்லை. நாய் புலியைவிட எக்காரணத்தாலும் அழகு பெருமையதல்ல; ஆனால் நாயினிடம் நல்ல குணமிருக்கிறது. ஆகவே அதனை எல்லோரும் விரும்புகிறார்கள்; வளர்க்கிறார்கள். சிலநாய்கள் பெரிய பெரிய அரசர்களால் தம் அரண்மனையில் வைத்து தாலாட்டப்படுகின்றன. இந்த உதாரணங்களால் குண விசேஷமே எதனையும் உயர்த்தவல்லது என்று விளங்குகின்றதன்றோ?

குணங்களில் முக்கியமானவை(பெண்களைப் பொறுத்த வரையிலும்) பணிவு, அன்புடைமை, நகை முகம் கோடல், பொறை (பொறுத்துக்கொள்ளுமியல்பு)

அடக்கமுடைமை முதலியனவாம். இவற்றைத்தான் நானும் அனுபவத்தால் நற்குணமெனக் கண்டிருக்கிறேன்.

இந்த விடத்தில், "பெண்கட்குத்தான் இந்த குணம் வேண்டுமோ? ஆடவர்கட்கு வேண்டாமோ?" என்று நீ கேட்கலாம். நல்லது, நற்குணம் ஒரு சாராருக்குத்தான் வேண்டும், மற்றொரு சாராருக்குத் தேவையில்லை என்பதில்லை. கற்கண்டு எவருக்கானாலும் வேண்டுவதன்றோ. ஆனால் பெண்கள் அதிக குணம் பெற்றிருக்கவேண்டு மென்பது என் ஆசை. காரணம் பெண்கள் இயல்பிலேயே சக்தி மிகுந்தவர்கள். அவர்கட்கு புருஷர்களை எப்படியும் வளைக்கும் ஆற்றல் உண்டு; அன்றி புருஷர்களைப் படைத்து உலகிற்கு அளிக்கும் பொறுப்புமுண்டு. பொதுவாக நோக்கினால் ஆடவரென்னும் மோட்டாரை—ஏன் உலக மோட்டாரையே—ஓட்டும் டிரைவர்கள் பெண்கள்தான். ஆகவே அவர்கள் நற்குணம் அதிகம் பெற்றிருக்கவில்லையானால் மோட்டார் பல விபத்துக்களில் சிக்கி மனித சஞ்சாரத்தை அழித்துவிடும். மேலும் காந்திஜி, விவேகானந்தர், ஹிட்லர், முசோலினி, லெனின், ஸ்ரீ கிருஷ்ணன், கம்பன், ஹோமர், ஷேக்ஸ்பீயர், நெப்போலியன், சிவாஜி, ஜவஹர் போன்றோரை பெறும் தாய்மார்களின் குணம் கன்னற் சுவையாயிருந்தால் எவ்வளவு நலம்; எவ்வளவு நலம்! நாம் நினைத்தால் புருஷர்களை பதினாயிரம் குட்டிக்கரணம் (ஒரு நொடியில்) போட வைக்கலாமன்றோ? தங்காய்! திறந்து கூறுகிறேன். நம் ஒரு சிறு புன்னகை உலக சரித்திரத்தை மாற்றிவிடாதோ? தம் காதலியின் ஒரு துளிக் கண்ணீர் நெப்போலியனையும் கலக்கிவிட்டதென்றால், ஏன் அதிகம் சொல்லவேண்டும்? சர்வ சக்தியுள்ள பெண்கள் நற்குணமென்னும் சக்தியையும் பெற்றிருப்பது பொன்மலர் நாற்றம் பெற்றாற் போன்றதாகுமன்றோ?

நிற்க; நற்குணம் செய்யும் நன்மையைப்பார். சந்திரசேகரன் மனைவி (கோமளம்) உனக்கு சிநேகிதியும் உற்ற சங்கதியெல்லாம் சொல்பவளுந்தானே. அவள் தன் பணிதலினால் அன்றோ புருஷனுடன் அன்பாக வாழ்கிறாள். சந்திரசேகரன் எவ்வளவு குருட்டுத்தனமாக நடப்பவர்? அப்படியிருந்தும் அவர் மனைவி சந்தோஷமாக வாழ்வதென்றால் என்ன பொறுமை, அடக்கம், பணிவு அவளிடம் இருத்தல்வேண்டும்!

அடுத்தபடியாக சீதையைப் பார் ஸ்ரீராமன் அரச பதவியைத் துறந்து ஆண்டியாக உடுக்கத் துணியின்றி மரவுரியுடன் காட்டுக்குப் போகிறான். நல்ல செருப்புக்கூட இல்லை அவனுக்கு. இருந்தாலும் மனைவியான சீதை உடன் செல்கின்றாள். ஸ்ரீராமன் அவள் வருகையை மறுத்து, காடு பயங்கரமான விடம் என்றும், கல்முள் நிறைந்த விடமென்றும் பலப்பல கூறுகின்றான். அதற்கு அவள், "ராமனிருக்கும் இடம்

சர் தேஜ் பகதூர் சாப்ரூ—ஹேக் சர்வதேச கோர்ட் நீதிபதி.

எதுவானாலும் அதுவே எனக்கு அயோத்தி அரண்மனை" என்கின்றாள். அப்பால் காட்டில் சீதைக்கு எவ்வளவு இடுக்கண்கள் உண்டாகின்றன? அவற்றையெல்லாம் எவ்வளவு பொறுமையோடு ஏற்றுக்கொள்கிறாள்! கடுங் கானில், கொடிய ராக்ஷசக் கூட்டத்தில், குரூர விலங்குகட்கிடையில், காய்கனி தின்று வாழவேண்டிய நிலைமையிலும், (அமிர்தம்போல் உணவருந்தி அம்சதூளிகா மஞ்சத்தில் தூங்கிய) அவள் (சீதை) விளையாட மான் வேண்டுமென்று கூறுகின்றாள். அப்படியானால், பார், எவ்வளவு தூரம், மனம், ஸ்ரீராமனின் கூட்டுறவில் களித்திருக்க வேண்டும்! இப்படி துன்பத்தையெல்லாம் மறந்து புருஷனுறவே இன்பமெனக் கொண்டிருந்ததாலன்றோ இன்று உலகமெல்லாம் சீதையைப் போற்றுகின்றது! ஆராதிக்கின்றது!

அடுத்தபடியாக தமயந்தியைப் பார்! என்ன கஷ்டம்! என்ன துன்பம்! புருஷன் (நளன்) வெறியினால் தகாத முறையில் நாட்டையும், நகரங்களையும், ஆடையணிகளையும் சூதில்—மனிதன் வெறுக்கும் சூதாட்டத்தில் — தோற்றுவிடுகிறான். புஷ்கரன் அவனை துரத்துகின்றான் நாட்டை விட்டு வெளியே. உடன் தமயந்தி என்ன செய்கின்றாள் பார்த்தாயா? உடுத்த ஆடையோடு, தன் குழந்தைகளைக்கூட துறந்து விட்டு, புருஷனைப் பின் பற்றுகின்றாள். அவன் காட்டுக்குச் சென்று பலப்பல துன்பங்களை எய்துகின்றான் ஆடையைக்கூட தொலைத்து விட்டு. மனைவியை விட்டு ஓடி விடுகிறான் நடு காட்டில் யாரும் துணையில்லா நிலைமையில் ஒரு பெண்ணைவிட்டுப் போவதைவிட அவனுக்கு (அப்பெண்ணுக்கு) ஒரு புருஷன் செய்யவேண்டிய துன்பம் வேறுண்டா? என்றாலும் பார்! தமயந்தி கொஞ்சமேனும் நளனை வெறுக்கின்றாளா? அவள் விதியை நொந்தவளாகி தன்னூர் செல்கின்றாள். வழியில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அவற்றையெல்லாம் நளன் மீது வைத்த தூய அன்பினாலேயே தீர்த்துக்கொள்கிறாள். இறுதியில் பல வருடங்கட்குப் பிறகு புருஷனை அடைகின்றாள். அப்போது அவள் கொள்ளும் சந்தோஷத்திற்குத்தான் எல்லையுண்டா?

இன்னும் ஒரு உதாரணம். சகுந்தலாவை எடுத்துக்கொள். அவள் ஒரு அரசனையும் அரசன் அவளையும் காதலிக்கிறார்கள். எனவே இருவரும் இரகசியமாக மணந்து கொள்கின்றனர். அப்பால் அரசன் அவளைத் தனியாக காட்டில் விட்டுவிட்டு தன் தலை நகருக்குச் சென்று விடுகின்றான். அங்கே ராஜபோகம் நுகர்ந்து கொண்டு காதலியை நினைக்கின்றானில்லை இது நன்கு தெரியும் சகுந்தலாவுக்கு. எனினும் என்ன செய்கிறாள் தெரியுமா? ஓயாது துஷ்யந்தனையே (தன் கணவனை) நினைத்து நினைத்து பொழுது போக்குகிறாள். வேறொன்றிலும் புலன்களைச் செலுத்துகின்றாளில்லை- ஒரு நாள் ஒரு முனிவர் வந்து கதவைத் தட்டு



கிறார். அதுகூட அவள் செவியில் கேட்கவில்லை. அப்பால் சகுந்தலா தன் காதலனை தானாக நாடி செல்கிறாள். அப்போது நல்ல கருப்பம். பாவி! அரசன் அவளை திரும்பியும்பாராது தான் அவள் போன்ற ஒரு பெண்ணை கண்டதுமில்லை என்று இகழ்ந்து துரத்தி விடுகின்றான். எனினும் சகுந்தலை என்ன செய்கிறாள்? தன் கணவனையே தியானித்து வாழ்கிறாள். கடைசியில் புருஷனோடு அகில லோகமுமேத்தும் புதல்வனும் அரச பதவியும் அடைகின்றாள்.

இப்படியே பார்த்தால் உத்தமப் பெண்களெல்லாம் புருஷன் துன்புறுத்திய காலையிலும்விடாது அன்பையே சொரிந்து மணம் பெற்றிருக்கின்றார்களென்று அறியலாம்.

நான் மேலே சொன்னவைகளெல்லாம் கதையென்று நீ கூறலாம். சரி. கதையென்றே வைத்துக்கொள்வோம். கதையிலிருந்து உலக உண்மைகள் வெளியானால் அவற்றையேன் எடுத்துக் கொள்ளலாகாது?

நீ மற்றொரு கேள்வி கேட்கலாம். புருஷன் ஏன் என் பிழையைப் பொறுத்து, எனக்கு வணங்கி நடக்கக் கூடாது என்று கேட்கலாம். இக் கேள்விதான் இன்றைய உலகின் கண்ணில் மண்ணை வாரிப் போடுவது. ஒரு பெண் ஒரு புருஷனைப் பார்த்து 'எனக்கு நீ அடங்கி நட' என்று கூறுவாளானால் புருஷன் ஒரு காலத்தில் அடைந்திருந்த எஜமானத் தனத்தை இப்போது அப்பெண் அடைந்திருக்கின்றாளென்றன்றோ பொருள்படும்? 'நீ எனக்குப் பணி, நீ எனக்குப் பணி' என்ற பேச்சுநடை பெறுகின்ற விடத்தில் இருப்பது போட்டியும், தார்க்கிக உணர்ச்சியும் சண்டையுமே அல்லாது அன்பல்ல. நான் தம்பதிகட்கிடையில் அன்பே நிலவவேண்டுமென்கிறேன். தாம்பத்திய வாழ்க்கை அன்பெனும் தளையாற் சேரவேண்டும். அன்பு தோன்றுமிடத்து பணி என்ற ஏவல் வினை தோன்றாது. 'பணிகிறேன்' என்ற சொற்றொடரோ தலைகாட்டும். எனவே உன் புருஷனை நீ பணி என்று சொல்வாயா? அவனுக்கு அன்பிருந்தால் அவன் தானாகப் பணிவானே? நீ ஏன் உன் அன்பினால் அவனைப் பணிய வைக்கலாகாது? வாதத்தாலும் போட்டியாலும் வெற்றிவருவது சந்தேகம்; வந்தாலும் நெடுநாள் நில்லாது. ஆனால் அன்பினாலே வெற்றி ஏற்படுவது நிச்சயம்; என்பதோடு அவ்வெற்றி பன்னெடுங்காலம் நிற்கவும் செய்யும்.

சரோஜா, இன்னும் பார்; உன் புருஷன் காலை 8 மணிக்கு ஆபீசுக்குச் செல்கின்றார். மாலை 7 மணிக்கு திரும்பி வருகிறார். பகல் முழுதும் ஆபீஸ்! இரவு முழுதும் ஆபீஸ் வேலையைப்பற்றிய யோசனை! இப்படி நேரத்தையெல்லாம் பாழாக்கும் அவரிடம் நீ அன்பைக்காட்ட வேண்டுமா; அவர் உன்னை திருப்தி செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்க வேண்டுமா!

(இங்கு ஒரு காகிதம் காணப்படவில்லை)

இனி நேர்மையாக நடப்பாய் என்று நம்புகிறேன். க்ஷேமத்திற்கு பதில் எழுது.

அன்புள்ள சகோதரி,
[illegible] B. A.

# கப்பல் பிரயாணக் கட்டணம் விவரம்

## இந்தியத் துறைமுகத்திலிருந்து மலாய்நாட்டுத் துறை முகத்திற்கு

| | முதல் வகுப்பு சாப்பாட்டுடன் | இரண்டாவது வகுப்பு ஐரோப்பியர் சாப்பாட்டுடன் | A இந்தியர் சாப்பாட்டுடன் | ஐரோப்பியர் சாப்பாட்டுடன் | B இந்தியர் சாப்பாட்டுடன் | மூன்ருவது வகுப்பு | வந்து இறங்கும் துறைமுகம் |
|---|---|---|---|---|---|---|---|
| | Rs. | Rs. | Rs. | Rs. | Rs. | Rs. | |
| நாகப்பட்டணம். | 158 | 105 | 103 | 72 | 70 | 24 | பினங்கு |
| ,, | 163 | 110 | 107¾ | 76¼ | 74 | 27½ | கோலக் கிள்ளான் |
| ,, | 177 | 118 | 115½ | 83½ | 81 | 30 | சிங்கப்பூர் |
| சென்னை | 191 | 127 | 125 | 90 | 88 | 26 | பினங்கு |
| ,, | 195 | 132 | 129¾ | 93¼ | 91 | 29½ | கோலக் கிள்ளான் |
| ,, | 210 | 140 | 137½ | 100½ | 98 | 32 | சிங்கப்பூர் |

## மலாய் நாட்டிலிருந்து இந்தியத் துறை முகங்களுக்கு

| புறப்படும் துறைமுகம் | முதல் வகுப்பு சாப்பாட்டுடன் | முதல் வகுப்பு சாப்பாடில்லாமல் | இரண்டாவது வகுப்பு 'A' ஐரோப்பியர் சாப்பாட்டுடன் | 'A' இந்தியர் சாப்பாடு | 'B' ஐரோப்பியர் சாப்பாட்டுடன் | 'B' இந்தியர் சாப்பாடு | 3-வது வகுப்பு Deck | போய்ச்சேரும் துறைமுகம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | $ | $ | $ | $ | $ | $ | $ | |
| சிங்கப்பூர் | 116 | — | 78 | 76¼ | 61¾ | 60 | 20½ | நாகப்பட்டணம் காரைக்கால் |
| டிடி | 136 | — | 92 | 90¼ | 66¾ | 65 | 20½ | சென்னை |
| டிடி | 122 | — | 82 | 80¼ | 64¾ | 63 | | போர்ட் நோவே |
| டிடி | 120 | 112 | — | 80 | — | — | டிடி 28 | கூடலூர் காரைக்கால் இரங்கூன் |
| கோலக் கிள்ளான் | 106 | 91 | 72 | 69 | 55½ | 54 | 18¾ | நாகப்பட்டணம் காரைக்கால் |
| டிடி | 126 | 111 | 84 | 82½ | 61½ | 60 | 18½ | சென்னை |
| டிடி | 112 | | 76 | 74½ | 59½ | 58 | | போர்ட் நோவே |
| டிடி | 110 | | | 75 | | | டிடி 34 | கூடலூர்காரைக்கால் இரங்கூன் |
| பினங்கு | 102 | 89 | 68 | 66¾ | 49¼ | 48 | 16¼ | நாகப்பட்டணம் காரைக்கால் |
| டிடி | 122 | 100 | 81 | 79¾ | 58¼ | 57 | 16¼ | சென்னை |
| டிடி | 108 | 92 | 72 | 70¾ | 53¼ | 52 | — | போர்ட்நோவே கூடலூர் |
| டிடி | 92 | 83 | — | 64 | — | | 30 | இரங்கூன் காரைக்கால் |

# ரயில் போக்கு வரவு

## மதராஸ்-எழும்பூர்

### மெயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 15 |
| கூடலூர் பாஸஞ்சர்.... | மாலை 4 15 | காலை 11 30 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 35 |

### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 30 | மாலை 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 00 | காலை 7 15 |

## மதராஸ்—செண்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| ,, எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 5 ?0 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 20 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| ,, .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 15 |
| ப்ளுமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |





# விகடத்திரள்

ஆராய்ச்சித் துறையில் முனைந்து நிற்கும்,

ஒருவர்:—கோமளா! உன்னிடமிருந்து ஒரு விஷயமறிய விரும்புகிறேன். அதாவது முத்தம் கொடுக்கப்படும்போது நீ என்ன காண்கிறாய்?

கோமளா:—(நாணத்துடன்) முத்தம் பெறும்போது கண்ணை இறுக மூடிக்கொள்வதால் எனக்கு ஒன்றுமே தெரிவதில்லை.

* * *



பெரிய தந்தை:—(மகளிடம்) ரமணி! நீ அவனை மணந்து கொள்வதில் ஆக்ஷேபனையில்லை; ஆனால் கல்யாணச் செலவை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது.

ரமணி:—அதுபற்றி நீங்கள் கலங்க வேண்டாம். என்னைக் கடத்திக் கொண்டுபோய் விடுவதற்குத் தகுந்த ஏற்பாடுகளை நானே செய்து கல்யாண செலவை யொழித்துக் கொள்கிறேன்.

* * *

நோயாளி:—தாங்கள் செய்த உதவி எவ்வளவு மேலானது! அதற்கு என்ன வடிவத்தில் நான் கைமாறு செய்வேன்!

டாக்டர்:—செக்கு வடிவத்திலாவது போஸ்டல் ஆர்டர் வடிவத்திலாவது, பேப்பர் கான்ஸி (நோட்டு) வடிவத்திலாவது கைமாறை திருப்பிவிடு.

* * *

ஒரு மனிதன் தன் மனைவியோடிருக்கும் விவாக பந்தத்தை ரத்து செய்வதற்காக மனுச் செய்து கொண்டான்.

அவனிடம் நீதிபதி:—உன் மனைவியின் குடும்பத்தை நீ ஆதரிக்க வேண்டியதாயிருக்கின்றது என்பதுதான் உன் மனு அல்லவா?

மனுதார்:—ஆம்.

நீதிபதி:—நல்லது. அந்தக் குடும்பத்தில் எத்தனை உறுப்பினரிருக்கின்றனர்?

மனுதார்:—நான்கு பேர்.

நீதிபதி:—அவர்களுடைய தந்தை யார்?

மனுதார்:—நான் தான்.

* * *

தந்தை:—(மகனைப் பார்த்து) அடே! ஏண்டா வெயிலில் இப்படியலைகிறாய்? மூளை உருகிப் போய்விடுமே?

மகன்:—மூளை யிருந்தாலல்லவா அது பற்றி யோசிக்க வேண்டும்!

* * *

அமெரிக்காவில் உத்யோகம் நாடி வருபவர்களின் அறிவை விளக்குவதற்காக ஒரு பரீட்சை நடாத்தப்பட்டது. அதில் கேட்கப்பட்ட இரண்டு கேள்விகளாவன:—

(1) ஒரு நூலின் (கயிற்றின்) நீளமென்ன?

(2) ஒரு காட்டுக்குள் ஒரு நாய் எவ்வளவு தூரம் ஓடும்.

ஒருவரும் இக்கேள்விகட்கு விடையிறுக்கவில்லை. கடைசியில் ஒரு மாணவன் அடியில் வருமாறு விடையெழுதினான்:—

(1) கயிற்றின் மத்தியிலிருந்து ஒரு நுனிக்கு எவ்வளவு தூரமிருக்குமோ அதுபோல இருமடங்கு கொண்டது கயிற்றின் நீளம்.

(2) நாயினால் காட்டின் பாதி தூரந்தான் ஓடமுடியும். அப்பால் அங்கிருந்து வெளியே ஓடி விடும்.

* * *



மாமிசம் வாங்க வந்த ஒருவர்:—எனக்கு ஒரு ராத்தல் மாமிசம் வேண்டும். எலும்பு, கொழுப்பு, சவ்வு ஒன்று மிருக்கக் கூடாது.

உடன் மாமிசக் கடைக்காரன் ஒரு முட்டைக் கடையைக் காண்பித்து:—அப்படிப்பட்ட கறியை அதோ அந்தக் கடையில் போய்க் கேள்.

* * *

# சியாங்-கெய்-ஷெக் சீன குடியாட்சித் தலைவர்

## உள்நாட்டுக் கலகத்தை ஒடுங்கச் செய்யும் உத்தமர்

பத்திரிகை கலமெல்லாம் யுத்தப் பேச்சே நிறைந்து வரும் இந்நாளில் சீனாவின் தலைவராகிய சியாங்-கெய்-ஷெக்கைப் பற்றித் தெரியாமலிருக்க முடியாது. அவர் இன்று சீன தேசீய சர்க்காரின் தலைவராக விருக்கிறார். ஒவ்வொரு கணமும் உள்நாட்டு கலகத்திற்கு இடமாகி விடும் என்று எதிர்பார்க்கப்படுகின்ற சீனா இன்று சற்றுவது அமைதியோடு பிறர் கைப் புகாமல் இருக்கிறதென்றால் அதற்கு முழுக் காரணபூதராயிருப்பவர் சியாங்-கெய்-ஷெக்தான். இவரைப்பற்றி "ரிவ்யூ-அப்-ரிவ்யூஸ்" என்ற பத்திரிகையில் ஜான் இங்கிலாந்து என்பவர் எழுதியிருப்பதாவது:—

### சியாங்கின் இயல்பு

சீனாவின் நேற்றைய தலைவர் சியாங்-கெய்-ஷெக்கே; இன்றைய தலைவரும் அவரேயாவர். சுமார் 50 வயதுக்கு மேல் சென்றிராத அவர் நாளைய தலைவராகவு மிருக்கக் கூடும். மெலிந்த குள்ளமான சரீரமும் உயர்ந்த நெற்றியும், சிறிய கைகளும், பலமுடைய உடலமைப்பும், ஓயாது வேலைசெய்யு மியல்பும், பிரகாசமற்ற முகத் தோற்றமும் பெற்ற சியாங்கிடம் பெரிய மனிதனுவதற்கு வேண்டிய சாரீர லக்ஷணங்களொன்றுமில்லை. ஆனால் அவர் எதனையும் முகத்துக்கு நேராகப் பேசுவார்; அதேமாதிரி நேரில் நின்று காரியமும் செய்வார். இந்த லக்ஷணங்களே அவரை தேசமக்களின் அன்பை வென்று மதிப்பை ஈட்டும் நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கின்றன. அவரது மற்றொரு குணம் எதிர்காலத்தை உற்று நோக்கும் மதி நுட்பமாகும். வரப்போவது என்னவென்று அறிவதில் அவருக்கு அபார சாமர்த்தியம். ஆகவே சிற்சில காலங்களில் தற்போது கையிலிருக்கின்ற சௌகரியங்களோ பொருட்களோ எவையாயினும் எதிர்கால நன்மைக்காக விட்டுவிடுவார். இவர் தமது பெரிய சக்திகளை யெல்லாம் தொழில் முறையில் புகுத்தியிருந்தால் முன் அடைந்ததுபோல லேவாதேவி துறையில் ஏராளமான பணத்தைத் திரட்டிவிடுவார். என்றாலும் தேசப்பணியே செம்பணி என்றும் பெரும் பற்றுக்கொண்டு ராஜீய சேவையில் தலையிட்டு வருகிறார்.

### சியாங் குடும்பம்

சியாங்-கெய்-ஷெக்கிற்கு தன் தந்தை யார் என்பதே தெரியாது. காரணம் சியாங் இரண்டு வயது குழந்தையா யிருக்கும்போது தந்தை காலமாகிவிட்டார். செக்கியாங் மாகாணத்தில் ஒரு சிறிய கிராமத்தில் சியாங் பிறந்தார். பிறந்த வருடம் 1888 என்று தெரிகிறது. சியாங்கை வளர்த்து வந்தவர்கள் எல்லாம் தாயின் பந்துக்களாகிய நீங்போ வியாபாரிகளாவர். அந்தக் காலத்தில் செக்கியாங், வருஷத்தில் 40 மாணவர்கட்கு பணவுதவி செய்து பயோடாங் நகரத்திலிருக்கும் தேசீய ராணுவ கலாசாலையில் பயிற்றிக் கொண்டுவந்தது. சியாங் தனது 18-வது வயதை எட்டியதும் மேற்படி 40 பேர்களில் ஒருவரானார்.

சில மாதங்கட்குப் பிறகு செக்கியாங் ஸ்காலர்ஷிப்பை (உபகாரச்சம்பளத்தை) விட்டுவிட்டு சர்க்கார் ஸ்காலர்ஷிப் பெற்று டோக்கியோ (ஜப்பானின் தலைநகரம்) ராணுவ கலாசாலைக்குப் போனார். அங்கு பயின்று கொண்டிருந்த காலத்தில் தான் ருஷ்யாவுக்கும் ஜப்பானுக்கும் பிரமாண்டமான போர் ஏற்பட்டு அதில் ஜப்பான் போற்றரிய வெற்றியை எய்தியது. அந்த வெற்றியில் இசை கொண்ட பல வீரர்களில் சியாங்—கெய்—ஷெக்கும் ஒருவராவர்.

சியாங் மேற்படி கலாசாலையில் பட்டம் பெறப்போகும் தருணத்தில் அதாவது 1911-ல் சீனாவில் புரட்சி ஏற்பட்டது. உடன் சீனாவுக்கு விரைந்தோடி வந்தார். அங்கு ஒரு ஒழுங்கற்ற புரட்சிப் பட்டாளத்தின் தலைமைப் பதவி கொடுக்கப்பட்டது. அந்த சேனையை வைத்து நடாத்தியதில் குறிப்பிடத் தகுந்த எந்தவிதமான பெருமையும் அவருக்கோ ராணுவத்திற்கோ கிடைக்கவில்லை. யுவான்-ஷி-கெய் ஆட்சியும் வெற்றிகரமாய் நடைபெறுமென்று தோற்றவில்லை. ஆகவே புரட்சி அரசியலை நீத்துவிட்டு ஷாங்கேயில் தொழில் செய்து காலந்தள்ள முற்பட்டார். அந்த போழ்தில் தான் அவருக்கு முதன் முறையாக கல்யாணம் நடைபெற்றது.

### மீண்டும் சீனாவில் புரட்சி

1913ல் இரண்டாவது புரட்சியொன்று நடைபெற்றது. அதிலும் வெற்றி எதுவும் வரவில்லை. அந்த தோல்வி சியாங்கேயின் மனதில் ஆழப்பதிந்தது. எனவே நேராக டோக்கியோ நகருக்குச் சென்றார். அங்கு சன்யட்—சென்னும் சியாங்கேயும் சந்தித்துப்பேசினர். சியாங் சன்னின் அடிமையானார். 1917சன்யட்சேன் குவாண்டங்கிற்குப் போனார்; அப்போது சியாங்—கெய்—ஷெக்கும் உடன் சென்றார். 1923-ல் சன், சியாங்கை மாஸ்கோவுக்கு அனுப்பி சிவப்புப் படை, குவோமின்டாங் முதலியவற்றின் அமைப்பு, ஆக்கம் ஆகியவைகளைப் படித்து வரச் சொன்னார். சியாங் திரும்பி வந்ததும் சோவியத் முறையைப்பற்றி பெரிய அறிக்கை யொன்றை விடுத்தார். அவ்வறிக்கையே சர்வாதிகாரியை ஏற்படுத்த வேண்டுமென்ற கிளர்ச்சிக்குக் காரணமாயிற்று; சியாங்கை வாம்போவா ராணுவக் கலாசாலை தலைவராக்கியதும் அவ்வறிக்கையே.

வாம்போவா கலாசாலையில் ஒரு பகுதியை குவாமின்டாங் உத்தியோகஸ்தர்களே நிர்வாகம் செய்துவந்தார்கள். அவர்களெல்லாம் சியாங் நேயினால் மாஸ்கோவிலிருந்து கொண்டு வரப்பட்டவராவர். அவர்களது நிர்வாகம் பெரிய வெற்றியை அளித்தது. குவோமின் சூன் என்ற சீன தேசீய ராணுவம் அவர்களால்தான் அமைக்கப்பட்டது. அந்த ராணுவம் எந்த தேச ராணுவத்திற்கும் இளைத்ததல்ல என்பதோடு அதுபோல் நல்ல ராணுவம் சீனாவில் அதற்கு முந்தி எக்காலத்திலும் ஏற்பட்டதுமில்லை.

1923 முதல் 28 வரையிலுமுள்ள புரட்சிகளி லெல்லாம் குவோமின்சூன் மாறுபாடாத வெற்றியை பெற்றுக் கொண்டிருந்தது என்று சொல்லிவிட முடியாது. சியாங்கும் வெற்றியே அடைந்து கொண்டிருந்தார் என்பதற்கில்லை. வெற்றி தோல்விகளெல்லாம் அவர் வாம்போவா கலாசாலையில் மாணவர்களிடையே ஏற்படுத்தும் உணர்ச்சிக்கு ஒத்தவண்ணமே இருக்கிறது. ஒரு தடவை அவர் அக்கலாசாலையில் பெற்றுக் கொண்ட மதிப்பு இன்னும் அழிந்து போகவில்லை என்பதுதான் அவர் வெற்றிக்கு எடுத்துக்காட்டு.

### அரசியல் திறம்

சியாங்கின் அரசியல் வெற்றிகள் ராணுவ வெற்றியைப் போல் பெயரெடுத்ததல்ல. அவர் ஷாங்கேய்க்கு வந்து சாங்-சிங்-சியாங் என்ற பழைய புரட்சி நண்பரையும் அவர் மூலமாக வேறு பலரையும் சந்தித்து நட்புக் கொண்டு அவர்கள் உதவியால் பல சீன தனவந்தர்களை நாடி 1927ல் நாங்கிங்கில் ஒரு எதிர்த் துரைத்தனத்தை நிறுவினார். நிறுவியதும் தனவந்தர்களின் தூண்டுதலால் ஷாங்கேயிலிருந்த பொது வுடமைக்காரர்களை யெல்லாம் வெளியே துரத்தினர். இச்செயல் சியாங்கின் வாழ்க்கையில் ஒரு பெரிய குறையாகும்.

### கல்யாணம்

பொதுவுடமைக்காரர்கள் துரத்தப் பட்டதாலும் போட்டி சர்க்காரேற்பட்டாலும் போர் மூண்டது. போரில் (அவரது) சியாங்கின் அரசாட்சி வீழ்ச்சி யுற்றதோடு அவர் பதவியை ராஜினாமா செய்து விட்டு டோக்கியோ சென்றார். செல்கையில் தம்கையில் அதிகமான திரவியத்தைக் கொண்டு சென்றாரல்லர். அது ஒரு நன்மைதான். மேலும் போற்றத் தகுந்த ஒரு நல்ல தேசாபிமானி வெளி நாட்டில் சென்று எப்படி இருப்பார்? அவருடன் குவோமிங்டாங்கின் ஒரு பகுதி பகைமை கொண்டிருந்தது; அப்பகைமையால் யுத்தம் தோல்வியடைந்துவிட்டது. ஆகவே அப்பகுதியின் நட்பைப் பெற்றாலல்லது செல்வாக்கடைய வழியில்லை என்று உறுதி கொண்டார். ஆதலால் அவர் வெளிப்படையாக மிஸ்டர் T. V. சூங்கின் சகோதரியாகிய மிஸ். சூங்மெய்—லிங் என்ற மாதை காதலிப்பதாகக் கூறினார். மிஸ்டர் T. V. சூங் பன்முறை சீனா பொக்கிஷ மந்திரியாக இருந்தவர்; பெரிய செல்வாக்குடைய தலைவர். மேலும் மே. த. கங், சன்யட்சேன் முதலியோரின் சொந்தக்காரர். மகா யுத்தத்தின் பின் (1914-16) சீனாவின் சரித்திரமெல்லாம் சூங் பரம்பரையின் சரித்திரந்தான். அவர்கள்தான் அரசியல் தலைவர்களாக விருந்து குடியரசை நடத்தி வந்திருக்கிறார்கள். எனவே சியாங்-கெய்-ஷெக் மிஸ் சூங் மெய்-லிங்கை மணக்க நினைத்தது பெரிய அதிர்ஷ்டமாகும். 1927 டிசம்பர் மாதம் சியாங் சீனாவுக்குத் திரும்பி வந்து மிஸ். சூங்கை மணம் புரிந்தார். 1928 ஜனவரியில் நாங்கிங் கவர்ண்மெண்டு சீர்திருத்தம் செய்யப்பட்டது. அதன்படி பெப்ரவரி மாதத்தில் தேசீய ராணுவத்தின் கமாண்டராக சியாங் நியமிக்கப்பட்டார். அது முதல் அளவுக்குமிஞ்சி வளர்ந்திருக்கும் ராணுவத்தைக் கலைத்துவிட வேண்டுமென்று அபிப்பிராயங் கூறி, அதனை பொக்கிஷ மந்திரிகள் ஒத்துக்கொள்ள, சியாங் ஸ்டேட் கவுன்சிலின் தலைவரானார். அதுவேதான் குடியரசின் தலைமைப் பதவியும் ஆகும்.

சின்னாட்களுக்குப் பின் காண்டன் ராணுவம் வற்புறுத்த அவர் தம் பதவியை ராஜினாமா செய்தார்.

### சியாங்கின் செயல் திறம்

சியாங்-கெய்-ஷெக் சீனா தேசீயவாதிகள் விழைந்த காரியங்களில் சிலவற்றையே சாதித்தார். 'சமமில்லாத' உடன்படிக்கைகளெல்லாம் அப்படியே இருக்கின்றன. உள்நாட்டுக் கலகங்கள் ஓய்ந்துவிடவில்லை. சீனாவின் மிகச் செல்வமான பகுதி (மஞ்சூரியா) நஷ்டமாகி விட்டது. சமூக சம்பந்தமாக சீனாவில் ஏற்பட்டிருக்கும் சில திருத்தங்கள் சியாங்கின் வேலையல்ல.

எனில் சியாங்—கெய்—ஷெக்கைப் பாராட்டக் காரணம் என்ன? 1927ல் எல்லா அரசில் தீர்க்க தரிசிகளும் சீனா வல்லரசுகட்குள் பங்கு போட்டுக் கொள்ளப்படும் என்று சொல்லத்தகுந்த நிலைமை ஏற்பட்ட காலையில் சியாங்—கெய்—ஷெக் செய்த அரிய முயற்சியே இன்று சீனா சீனாவாயிருக்கக் காரணம். எதிர் காலத்தில் அவர் இணையற்ற ஒரு அரசியல் தலைவரும் ராணுவத் தலைவருமாவார் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஜப்பானோடு பழக்கமும் பரிசயமுமிருப்பதால் இருதேசங்களையும் நண்பர்களாக்கி கீழ் நாட்டு முன்னேற்றத்தை உண்டு பண்ணுவாரென்று நன்றாகக் குறிப்பிடலாம். அப்படியொரு கீழ் நாட்டு ஐக்கிய மேற்பட்டால் மேனாட்டார் கப்பலேறிவிடவும், 19-வது நூற்றாண்டில் அடைந்த லாபம் மண்ணாய்ப் போகவும் இடமேற்படுவது நிச்சயம்.

# விமானத் தபால் விபரம்

---

### கராச்சி—சென்னைப் பாதை

| | | | |
|---|---|---|---|
| காரச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வெள்ளி | திங்கள் |
| ஆமதாபாத் | புறப்படும ,, | ” | ” |
| பம்பாய் | ” | ” | ” |
| ஹைதராபாத் | வரும் நாள் | ,, | |
| ” | புறப்படும் | சனிக்கிழமை | செவ்வாய் |
| சென்னை | வரும் நாள் | சனிக்கிழமை | செவ்வாய் |

### சென்னை—கராச்சிப் பாதை

| | | | |
|---|---|---|---|
| சென்னையிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| ஹைதராபாத் | வரும் நாள் | ” | ” |
| ” | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| பம்பாய் | ” | ” | ” |
| ஆமதாபாத் | ” | ” | ” |
| காரச்சி | வரும் நாள் | செவ்வாய் | சனி |

### கராச்சி—கல்கத்தா—ரங்கூன்
(டாடா ஏர் சர்வீஸ்)

| | | | |
|---|---|---|---|
| காரச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வியாழன் | ஞாயிறு |
| ஜோட்பூருக்கு | வரும் நாள் | ” | ” |
| ஜோட்பூர் | புறப்படும் நாள் | வெள்ளி | திங்கள் |
| கல்கத்தா | வரும் நாள் | ” | ” |
| ” | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| ரங்கூன் | வரும் நாள் | ” | ” |

### ரங்கூன்—கல்கத்தா—கராச்சி

| | | | |
|---|---|---|---|
| ரங்கூனிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| கல்கத்தா | வரும் நாள் | ” | ” |
| ” | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| ஜோட்பூர் | வரும் நாள் | ” | ” |
| ” | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| காரச்சி | வரும் நாள் | ” | ” |

### கிராய்டன் (லண்டன்) கராச்சி

| | | | |
|---|---|---|---|
| கிராய்டன் | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| காரச்சி | வரும் நாள் | வியாழன் | ஞாயிறு |

### கராச்சி—கிராய்டன்

| | | | |
|---|---|---|---|
| காரச்சி | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| கிராய்டன் | வரும் நாள் | திங்கள் | வெள்ளி |

## கட்டண விகிதம்

---

### இந்தியாவிலிருந்து

இங்கிலாந்து அல்லது ஐயர்லாந்துக்கு (ஆகாயத் தபாலில்) அனுப்பப்படும் எந்த கடிதங்கட்கும் முதல் ஔன்ஸுக்கு 7½ அணுவும் அப்பால் ஒவ்வொரு ஔன்சுக்கும் 7 அணுவும் ஸ்டாம்புக் கட்டணம் செலுத்தப்பட வேண்டும்.

டச்சு கிழக்கிந்தியத் தீவுகள், ஆஸ்திரேலியா ஆகிய தேசங்கட்கு அரை ஔன்ஸ் காகிதங்கட்கு முறையே 6 அணு, 8 அணு 6 பைசா தபால் கட்டணமும் சாதாரண தபால் கட்டண விகிதமும் செலுத்த வேண்டும். ரிஜிஸ்தர் கடிதமாக விருந்தால் அதற்கான 3 அணு கட்டணம் தனியாகச் செலுத்தப்பட வேண்டும்.

கார்டுகட்குக் கட்டணம் 4 அணு.

### இந்தியா பர்மாவுக்குள் எந்த இடத்திற்கும் ஆகாயத்தபாலில் கடிதமனுப்ப.

ஒவ்வொரு அரைத் தோலாவுக்கும் 2 அணு. அரைக்கு மேல் ஒரு தோலாவரை இருந்தால் சாதாரணத் தபால் கட்டணமும் 2 அணுவும் அதற்குமேற்பட்ட ஒவ்வொரு இரண்டு தோலாவுக்கும் 2 அணுவும் சாதாரண தபால் விகிதமும்.

### தபால் நேரம்

பம்பாய், காரச்சி முதலியவிடங்கட்கு சென்னையில் ஆகாயத் தபால் கடிதங்கள் ஜெனரல் போஸ்டாபீஸில் சேர்ப்பிக்கப்பட வேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| திங்கள் | பகல் | 12—15 |
| வெள்ளி | ” | 12—0 |

ரங்கூன் செல்லும் விமானத் தபால் கடிதங்களை "போஸ்டு" செய்யவேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| புதன் | மாலை | 6—25 |
| சனி | மாலை | 3—0 |

---



# சென்னை கார்ப்பொரேஷனில் ஐரோப்பியர் தோல்வி

"ஐயா"

லார்டு ஆம்ப்திில் என்பவர் கொஞ்சக் காலமாக சென்னை கவர்னராக விருந்தார். இருந்து இங்கிலாந்து சென்றவர் போனவாரம் இறந்து போனார். எத்தனையோ வெள்ளைக்காரர்கள் சாவது போன்றுதான் இவரும் செத்தார். விசேஷமாக இறக்கும்போது எந்தவிதமான அபூர்வ வேலைகளையும் செய்துவிடவில்லை. ஆனால் சென்னை கார்ப்பொரேஷன் ஆசாமிகட்குப் பொறுக்க முடியவில்லை. ஜூலை 10-ந்தேதி ஒரு கூட்டம்போட்டு "ஆம்ப்திில் இறந்து போனதற்காக நாங்கள் வருந்துகிறோம்" என்று தீர்மானம் போட்டார்கள். நல்ல வேளை! "அவரைக் கொன்ற இயமதர்மனை அழுத்தமாக கண்டிக்கிறோம்" என்று தீர்மானம் போட்டார்களில்லை.

சரி, எப்படியாவது போகட்டும். மேயர் மேற்படி தீர்மானத்தை பிரேரேபிக்க ஏகமனதாக நிறைவேறிற்று. அப்பால் திரு. C. முனிசாமி நாயுடு அவர்கள் இறந்துபோன ஆம்ப்திில் பிரபுவுக்கு, நிகழ்ந்துகொண்டிருக்கும் சபை, மரியாதை செய்வதற்கறிகுறியாக ஒத்திவைக்கப்பட வேண்டு மென்று ஒரு பிரேரேபனை கொண்டுவந்தார். அனுதாபத்துடன் கண்ணீர் வடிப்பவர்க்கு வேலை செய்ய முடியாமல் போவது சகஜந்தானே? ஆகவே வேலைகளை நிறுத்தி வைத்து கவுன்சிலையே ஒத்திப் போடுவதில் ஆக்ஷேபனை இருக்கமுடியாது.

ஆனால் மிஸ்டர் ரோலண்டு நாக்ஸ் என்ற ஐரோப்பிய மெம்பர் ஒருவர் எழுந்திருந்து கூட்டத்தை ஒத்தி வைப்பது தேவையில்லை யென்றும், வேலை முறையே நடைபெற்றுக்கொண்டிருக்க வேண்டியது அவசியமென்றும், லார்டு ஆம்ப்திில்லே கேட்டால்கூட அவர் கவுன்சிலை ஒத்திவைக்க வேண்டாமென்று கூறிவிடுவா ரென்றும் வாதம் செய்தார். இவரும் ஆம்ப்திிலும் ஐரோப்பியரானதால் ஒருகால் இறந்தவர் இரகசியம் இருப்பவருக்குத் தெரிந்திருந்தாலும் தெரிந்திருக்கலாம்.

திரு. நாக்ஸ் பேசி முடித்ததும் திரு. வி. சக்கரை செட்டியார் எழுந்து "கவுன்ஸிலை ஒத்திவைப்பது பற்றி லார்டு ஆம்ப்திில்லி னிடமோ அல்லது அவருடைய பிசாசினிடமோ கேட்டுத் தெரிந்துகொள்ள முடியாதாகையால் நமது சௌகரியம் போல எதுவும் செய்து கொள்ள வேண்டுவதுதான்" முறை என்றார்.

கூட்டம் முழுதும் சிரித்துவிட்டது. பலர் திரு. செட்டியாரை ஆமோதித்தார்கள். உடன் வாக்கர் என்ற ஐரோப்பியர் ஒருவர் எழுந்து தீர்மானத்தை ஓட்டுக்கு விடவேண்டுமென்றார். அதன்மேல் ஆங்கிலேயர்—சென்னை வாசிகள் சண்டை வரும்போல் தோற்றியது. கடைசியில் வாக்கர்தானே இருக்கும் நிலைமையைப் பார்த்துவிட்டு, 5 நிமிஷம் ஒத்திவைத்தால் போதுமென்று கூறி தன் திருத்தத்தை வாபஸ் வாங்கினார். எவ்வளவு வாங்கியும் திரு. முனுசாமி நாயுடு கேட்கவில்லை. அவர் அவசியம் சபையை ஒத்திவைத்தேயாகவேண்டுமென்று வற்புறுத்தினார். அந்தத் தீர்மானம் நிறைவேறிற்று.

இதனைப் பார்த்தால் வெள்ளைக்காரர்கள் இறப்பதில் மற்ற வெள்ளைக்காரர்களை விட இந்தியருக்குத்தான் அதிக சங்கடம்போல் தோற்றுகிறது. வெளிநாட்டா னொருவன் நம்மை ஆண்டானென்று சொல்வதே அவமானம்; அதைவிட அவமானம் அவன் செத்துப்போனதற்காக கண்ணீர் வடிப்பது. அப்படிப்பட்ட சங்கதியை சபை மினிட் புத்தகத்தில் ரிக்கார்டு செய்துவிடுவதென்றால் என்னென்று சொல்வது?

---

### காரைக்குடி காணுடுகாத்தானில் சீர்திருத்தத் திருமணம்

காணுடுகாத்தான் தோழர் வை. சண்முகம் அவர்கள் புதல்வி சௌபாக்யவதி பார்வதிக்கும் காரைக்குடி திரு ப. மெ. மெ. கா. நடராஜன் அவர்களுக்கும் 7—7—35-ந் தேதி சென்னை மந்திரி கனம் P. T. ராஜனின் தலைமையில் சிறப்பாக சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. தோழர் ஈ. வெ. ரா முதலியோர் சீர்திருத்தம்பற்றி சொற்பொழிவாற்றினார்கள்.

தம்பதிகளும் இதர அன்பர்களும் க்ஷேமமாய் வாழ ஆசைப்படுகிறோம்.

# செய்தித் திரட்டு.

மூக்குக் கண்ணாடிகள் 14-வது நூற்றாண்டில் ஓர் இத்தாலியரால் கண்டு பிடிக்கப்பட்டனவாம்.

* * *

லண்டனில் தினசரி பஸ் டிக்கட்களும் டிராம் டிக்கட்டுகளுமாக 70 லக்ஷம் டிக்கட்டுகள் விநியோகிக்கப் படுகின்றனவாம்.

* * *

வரப்போகும் சென்னை மேயர் தேர்தலுக்கு 4 முஸ்லிம் கவுன்சிலர்கள் அபேட்சகராக நிற்கிறார்கள் என்று தெரிகிறது.

* * *

திருநெல்வேலி சப் ஜட்ஜ் வீட்டில் களவு செய்த எட்வார்டு சாமுவேலுக்கு ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

* * *

ஸ்ரீமான் ரூடால்ப் பெட்ரூஸ்கா என்பவர் 24 தடவை தீட்டித்தீட்டி நெருப்புப் பெறத் தகுந்த அபூர்வ நெருப்புக் குச்சியைக் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

ஸ்ரீமதி சரோஜனி தேவியின் புதல்வர் திரு. ஜெய சூரியருக்கும் ஸ்ரீமதி எவலாட்ச் டார்ஜூ என்ற ஜர்மன் மாதுக்கும் 25—6—35 ல் விவாகம் நடந்தது.

* * *

மானாமதுரையில் ஓர் தலைமை உபாத்தியாயர் இரண்டு ஹரிஜன மாணவர்களைக் கூட்டிக் கொண்டு எங்கேயோ ஓடி விட்டார் என்று சொல்லப்படுகிறது.

* * *

சென்னை நகரைச் சபையில் வீடுகளில் "சப்டெனன்டாக" குடித்தனம் இருப்போருக்கு வோட்டுரிமை இருக்க வேண்டும் என்றும் எழுதப்படிக்கத் தெரிந்த எல்லோருக்கும் வோட்டுரிமையிருக்கவேண்டுமென்றும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

* * *

அம்ருதசரஸ் முனிசியல் சபை கமிஷனர் காங்கிரஸ் தலைவர் பாபு ராஜேந்திரர் விஜயத்தை (அநுசரித்து) உத்தேசித்து முனிசிபல் பள்ளிக்கூடங்களுக்கு விடுமுறை யளித்தார்.

* * *

ரூ. 30,000 கொடுக்க வேண்டுமென்று மரம் விற்பனை செய்யும் கம்பெனியொன்று பம்பாய் காங்கிரஸ் வரவேற்பு கமிட்டிமீது வழக்கு தொடர்ந்துள்ளது.

* * *

இந்திய ராணுவ மிருக வைத்திய படைக்கு மொத்தம் 60 இந்தியரை கமிஷனராக நியமிப்பார்கள் என்று சர்க்கார் அறிக்கை யொன்று கூறுகிறது.

* * *

தேவக்கோட்டையில் பட்டப் பகலில் திரு. வி. வ. ஸ்ரீநிவாசய்யர் வாயில் சில பேர்வழிகள் மண்ணை அடைத்து அவரிடமிருந்த சம்பளப் பணம் ரூ. 20-ஐ பிடுங்கிக்கொண்டு மறைந்தனர் என்று சொல்லப்படுகிறது.

* * *

போனவாரம் அமிர்தசரஸிலுள்ள தங்க ஆலயத்திற்கு லார்டு வெல்லிங்டன் தம்பதிகள் சென்றபோது நூறு ரூபாயை ஆலயத்திற்கு காணிக்கையாக செலுத்தினார்களாம்.

* * *

இங்கிலாந்தில் பொருள்களை விற்பனை செய்வதற்குப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படும் விளம்பரங்களுக்காக மட்டும் 10 கோடிப் பவுன்களுக்குமேல் ஒவ்வோராண்டும் செலவிடப்பட்டு வருகிறதாம்.

* * *

அழகா யிருக்க வேண்டுமென்றும் அழகை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்றும் நாடி இங்கிலாந்திலிருக்கும் ஸ்திரீகள் வருட மொன்றுக்கு 2 கோடிப் பவுன்களுக்கு மேல் செலவு செய்து வருகின்றார்கள்.

முத்துப்பட்டணம் காரைக்குடி திரு பி. ஆர். என். எஸ். கிருஷ்ணப்பசெட்டியாரிடம் குமஸ்தாவாக இருந்த கருப்பையா பிள்ளை உண்டியல் பணம் ரூ. 1500-யும் ரொக்கம் ரூ. 500-யும் எடுத்துக்கொண்டு கம்பி நீட்டி விட்டாரென்று கருதப்படுகிறது.

* * *

"பிரீ பிரஸ்" ரோட்டரி மெஷினைப் பற்றி ஸ்ரீ சோட்டாலால் விஸாஞ்ஜீ தொடர்ந்த "பிரீ பிரஸ்" வாதிக்கு வட்டியுடன் ரூ. 16,473 கொடுத்து விட வேண்டுமென்று பம்பாய் ஹைக்கோர்ட்டில் தீர்ப்புக் கூறப்பட்டது.

* * *

வேலூர் சிறையிலிருக்கும் அப்துல் சுபான் தனக்கு கேப்பை உணவு கொடுக்கப்படுவதற்குப் பதிலாக அரிசி உணவு கொடுக்கப்பட வேண்டுமென்று வேண்டிகொள்ள அவ்வேண்டுகோள் மறுக்கப்படவே, "உன்னை யார் மாஜிஸ்டிரேட்டாக நியமித்தது" என்று மாஜிஸ்திரேட்டிடம் கேட்டாராம்.

* * *

லாகூர் மேயோ ஆஸ்பத்திரியில் குவெட்டா பூகம்பத்தில் தன் காலை இழந்து சிகிச்சை பெற்றுவரும் 14 வயது சிறுமியை வெல்லிங்டன் தம்பதிகள் பார்வையிட்ட பொழுது அச்சிறுமி தான் குணமடைந்தால் வேறு கால் கொடுக்கப்படுவாளா வென்று வைசிராய் தம்பதிகளிடம் கேட்டாளாம்.

* * *

ஆஸ்ட்ரேலியச் ஸிட்னியில் ஒரு விவேகமுள்ள குரங்கு இருக்கிறது. அதற்கு ஞாபக சக்தி அதிகம். ஒரு முறை பிராணிகள் காட்சிச் சாலைக்கு வந்தவர் இரண்டாம் முறை வந்தால், அக்குரங்கு "போய் வாருங்கள்; இன்று அனுமதியில்லை" என்று கதவை மூடி விடுகிறது.

* * *

சென்னையில் மேயர் குவெட்டா நிவாரணநிதி ஜூலை 6-ந்தேதி வரை ரூ. 20,374. வசூலாகியுள்ளது.

* * *

உலகில் சுமார் 70 கோடி மாடுகளும், 75 கோடி ஆடுகளும், 30 கோடி பன்றிகளுமிருக்கின்றன.

* * *

கூர்ஜரத்தில் 24,027 பேர் காங்கிரஸ் அங்கத்தினராய் சேர்ந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

* * *

பிரிட்டனில் ஜெர்மன் சரக்குகளைப் பகிஷ்கரிக்கும்படி கிரேவ் சென்ட் வர்த்தக சங்கத்தார் தீர்மானித்திருக்கிறார்கள்.

* * *

காரைக்குடி முத்துசாமி செட்டியார் வீட்டில் ஒரு சமையல்காரன் ரூ. 1500 நகை பெட்டியுடன் ஓடி விட்டதாகத் தெரிகிறது.

* * *

பாரிசில் ஒரு பேர்வழி ஒரே நாளில் ஒரே நேரத்தில் தன்னுடைய மூளையை 53 தேசங்களுக்கு ரகசியமாய் விற்றிருப்பதாய்த் தெரிகிறது.

* * *

இங்கிலாந்தில் 10 வயது சிறுவன் ஒருவன் பெண்ணாக உருமாறிக் கொண்டு வருகிறான் என்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

* * *

திருநெல்வேலி ஹிலால் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட ஸ்வராஜிய அயர்லாந்து, வீரமூர்த்தி ஜவஹர்லால் நேரு என்ற இரு புத்தகங்களையும் சர்க்கார் பறிமுதல் செய்துவிட்டனர்.

* * *

1934-ம் வருஷம் ஏப்ரல் மாதம் இருந்ததைவிட 1935-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் இந்திய ஏற்றுமதி வர்த்தகம் 2 கோடி ரூபாய் குறைந்து விட்டதாம்.

* * *

லட்மணபுரியில் அடுத்த காங்கிரஸ் மகாசபைக் கூட்ட வரவேற்புக் கமிட்டி காரியலயத்தை ராஜேந்திரபாபு ஜூலை 6-ந்தேதி கிருகப்பிரவேசம் செய்து வைத்தார்,

* * *

ஜூலை 4-ந்தேதி திடீரென புயலும் மழையும் தங்கள் ஆர்ப்பாட்டங்களை டில்லியில் நடத்தின. சகல விதமான போக்கு வரத்துகளும் தடைபட்டன. மரங்கள் தலைகீழாக மாய் பூமியில் படுத்தன.

* * *

காங்கிரஸ் திட்டத்தை வெளிநாடுகளில் பிரசாரம் செய்வதற்காக ஆங்காங்கு காங்கிரஸ் ஸ்தாபனங்களை அமைக்க வேண்டுமென்று பாபு ராஜேந்திரருக்கு ஒரு நோக்க மிருக்கிறது.

* * *

மந்திரிகளுக்கும், இலாகா அதிகாரிகளுக்கும் சர்க்கார் காரியதரிசிகளுக்கும் குறிப்பிடப்பட்ட வேறு சில பெரிய உத்தியோகஸ்தர் களுக்கும் மாளிகைகள் கட்ட சென்னை சர்க்கார் ரூ 50,000 ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். மாளிகைகளை எல்லாம் பெரும்பாலும் அடையாற்றில் கட்டத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

* * *

லாகூரில் நடைபெறும் முஸ்லீம்கள்—சீக்கியர் தகாரார்களைப் பற்றிப் பத்திரிகைகள் எவ்வித அபிப்பிராயங்களையும் வெளியிடக்கூடா தென்று சர்க்கார் எச்சரிக்கையை விடுத்துள்ளார்கள்.

* * *

கிரீஸ் மாஜி மன்னர் ஜார்ஜ் மீது மாஜி ராணிஎலிஜபத் தொடர்ந்த விவாகரத்து வழக்கில் விவாக ரத்து கோர்ட்டாரால் அனுமதிக்கப்பட்டது. வாதியோ, பிரதிவாதியோ கோர்ட்டில் ஆஜராகவில்லை.

* * *

காரைக்குடி திவான் பகதூர் பட்டம் பெற்ற திரு. மரு. சு. சுப்பையா செட்டியார் அவர்கட்கு முனிசிபல் சேர்மென் திரு. மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் ஜூலை 2ந் தேதி உயரிய விருந்தளித்தார்.

* * *

மிடோரிமாரு என்ற ஜப்பான் கப்பல் மூடுபனியில் திக்குத் தெரியாமல் மோதுண்டு மூழ்கிவிட்டது. இவ்விபத்தால் சுமார் 81 பேர்கள் மாண்டதாகத் தெரிகிறது.

* * *

புரட்சி செய்து பீகிங் நகரை முற்றுகை செய்ய முயன்ற சீன சிப்பாய்களின் தலைவனை தோழர் டுபான் சுன்சி என்பவருக்கு ராணுவ கோர்ட்டார் தூக்கு தண்டனை விதித்தனர்.

# மயிலாப்பூரில் எண்ணெய்ச் சுரங்கம்

மயிலாப்பூர் எண்ணெய் சுரங்கப் பிரதேசமாவென்பது பற்றி கூடிய சீக்கிரம் பரிசோதனை நடக்கப்போகிறது. மயிலாப்பூரைச் சார்ந்த புதிய பிரதேசமான அபிராமபுரத்தில் பூமிக்குள் ஒருவித 'காஸ்' (எரியக் கூடிய புகை) இருப்பதை கண்டு பிடித்துள்ளனர். அதனை வீட்டில் அடுப்பு எரிக்கவும், இதர காரியங்களுக்கும் உபயோகிக்கலாமென்று பிரபல ரசாயன சாஸ்திரி ஒருவர் கருதுகின்றார்.

அந்த 'காஸ்' கண்டு பிடிக்கப் பெற்ற விதம் வருமாறு:—அபிராமபுரத்தில் போஸ்ட் ஆடிட் ஆபீஸ் உத்யோகஸ்தர் திரு. நீலகண்ட ஐயருக்குச் சொந்தமான நந்தவனத்தில் குழாய்க் கிணறு ஒன்றை அவ்வித கிணறுகள் வெட்டுவதில் நிபுணரான திரு. கணபதி ஐயர் (திருநெல்வேலி வாசி) வெட்டி வந்தார். முதலில் திரு. நீலகண்ட அய்யர் தமது மாளிகையில் பெரிய கிணறு ஒன்றை வெட்டினர். ஆனால் அக் கிணற்றின் ஜலம் எண்ணெய் கலந்ததாகவும், மஞ்சள் நிறமானதாகவுமிருந்ததால், அவர் திருப்தி யடையவில்லை. ஆகவே அவர் தமது நந்தவனத்தின் மற்றொரு புறத்தில் குழாய்க் கிணறு ஒன்று வெட்ட முடிவு செய்தார். 50 அடி ஆழம் தோண்டியதும், ஏதோ சப்தம் கேட்டது. ஜலமிருப்பதாக அறிகுறிகள் இல்லை.

### வெடி சப்தமும் நெருப்பும்.

ஒரு தொழிலாளி தற்செயலாக எரியும் தீக்குச்சி யொன்றை அந்த கிணற்றுக்குள் போட்டார். திடீரென்று வெடி சப்தம் கேட்டது. நெருப்பு 10 அடி உயரம் எரிந்தது.

உடனே பிரபல ரசாயன சாஸ்திரி ஒருவரின் உதவியை நாடினர். அவர் அந்த காஸை பரிசோதனை செய்து பார்த்து, அந்த காஸில் பாஷாண சத்து இல்லையென்றும், அது காற்றுடன் கலக்குமானால் அதனை அடுப்புக்கும் இதர காரியங்களுக்கும் உபயோகிக்கலாமென்றும் அறிவித்தார். அது காற்றுடன் கலக்கும்போது எரியும் தன்மை வாய்ந்ததாக விருக்கிறது.

திரு. நீலகண்ட அய்யர் அந்த கிணற்றிலிருந்து தமது சமையல் அறைக்கு காஸை கொண்டு வர சிறு குழாய் ஒன்று அமைத்துள்ளார். அந்த 'காஸ்' எண்ணெய் போல் எரிகிறது. அதனை நெருப்பாக உபயோகித்தே ஸ்ரீமதி நீலகண்ட அய்யர் சமையல் செய்து வருகிறார்.

### புரபசர் அபிப்பிராயம்

பிரஸிடென்ஸி கல்லூரி ரசாயன புரபசரான டாக்டர் பி. பி. டே அறிவித்ததாவது:—'அந்த காஸ் காற்றோடு கலக்குமானால் நன்றாக எரியும்; அதனை விறகுபோல் உபயோகிக்கலாம். மைலாப்பூரில் பல நூற்றாண்டுகளாக அழிந்து அமுங்கிக் கிடக்கும் தாவர சத்திலிருந்தே இந்த 'காஸ்' ஏற்பட்டுள்ளது. அந்த சத்துள்ள இடத்தைக் குழாய்க் கிணறு தட்டவும், அந்த காஸ் வெளி வர ஆரம்பித்தது. பூமியின் தன்மை என்னவென்பதை இன்னும் பரிசோதனை செய்யவில்லை. ஆகவே இந்த பிரதேசத்தில் எண்ணெய் இருக்கிறதா வென்பதை திட்டமாகக் கூறுவது சாத்தியமல்ல; ஆனால் இருக்கக் கூடுமென்பதைப் புறக்கணித்துவிட முடியாது.

இந்த விஷயத்தைப் பற்றி மேலும் பரிசோதனை நடக்கும்.

---

# கோஷாப் பெண்கள் குதிரை சவாரி

துருக்கி தேசத்தின் முன்னேற்றத்தைக் கண்டு பெர்ஷியா (இப்போது இரான்) அரசர் ரிஜாகான் பேல்வியும், அதைப் பின்பற்றத் தொடங்கியுள்ளார். தற்சமயம் பர்தா வழக்கத்தைப் போக்குவதற்கு முயற்சி செய்யப்படுகிறது. அரசரின் உத்திரவுபெற்று அவரது இரண்டு குமாரிகளும் தங்களுடைய பர்தாக்களை எடுத்து எறிந்து விட்டனர். ஒரு பெண்ணுக்கு வயது 18. மற்றவளுக்கு வயது 17. அந்தப் பெண்கள் பகிரங்கமாகக் குதிரை சவாரி செய்வதை எல்லோரும் பார்க்கின்றனர்.

---

### கதர்த் திருமணம்

3-7-35 தேதி திண்டுக்கல் தாலுக்காவைச் சேர்ந்த கோட்டைப்பட்டியில் தேசபக்தர் ஸ்ரீமான் K. அப்பாவுத் தேவர் அவர்களின் குமாரர் பசுங்கிளித் தேவருக்கும் ஷெயூர் தேசபந்தரும், சிறந்த கதர்த் தொண்டருமான ஸ்ரீமான் வெள்ளைச்சாமித் தேவர் அவர்களின் புதல்வி பொம்முத் தாயம்மாள் அவர்களுக்கும் விவாகம் நடைபெற்றது. கல்யாணப் பந்தலில் தேசியக் கொடிகள் பல பறந்தன. மணமகனும் மணமகளும் கதர் ஆடைகள் அணிந்திருந்தனர். இத்திருமணத்தில் ஆயிரம் ஹரிஜனங்களுக்கு விருந்தளிக்கப்பெற்று 50 ஹரிஜனங்களுக்கு வஸ்திரம் கொடுத்துதவியது மிகவும் போற்றத்தக்கது. மணமக்கள் நீடூழி வாழ்க! என்று திரு. க. அ. ஆறுமுகன் எழுதுகிறார்.





# எனது ராஜீயக் குறிப்புகள்

(ஸ்ரீ நாரத பிரம்மம்)

சென்ற வாரம் நான் பர்லினிலிருந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டேனல்லவா? ஆனால் போகவில்லை. வான மார்க்கமாக மாயா கிருஷ்ணனை பஜனம் செய்து எழுந்ததும், திடீரென ஒரு பெரிய மின்னொளி பாய்ந்தாற்போல தெரிந்தது. உடன் நான் கல்கத்தாவில் நந்தனார் படமெடுக்கும் இடத்திற்கு வந்துவிட்டேனோ வென்று ஐயுற்றேன். சிறிது பொறுத்துப் பார்த்ததும், இத்தாலியில் ஒரு விமானத்தின் மீது மின்னேறு பாய்ந்ததாகத் தெரிந்தது. உடன் தென் திசை (ரோம்) நோக்கி விரைந்தேன்.

அங்கு என்ன தெரியுமா? இத்தாலி சர்வாதிகாரியாகிய முசோலினி அபிசீனியாவுடன் போர் செய்வதற்குக் கச்சை கட்டி லோகர்னோ கறுப்புச் சட்டைகளை தணிக்கை செய்வதற்காக ஒரு கடல் விமானத்தில் ஏறினர். ஏறியதும் ஒரு மின்னல் விமானத்தில் பாய, ரேடியோ அதிகாரி மூர்ச்சையாகி விழுந்தார். முசோலினிக்கு யாதொரு கெடுதியும் ஏற்படவில்லை. விமானமும் பழுதுபடவில்லை பாருங்கள்.

யுத்தத்திற்கு ஆரம்பிக்கும்போதே அபசகுனம் ஏற்படுகிறது. இந்துக்களாக விருந்தால் உடன் முயற்சியை விட்டு யுத்தத்தை நிறுத்திக் கொள்வார்கள். ஆனால் வெள்ளைக்காரனல்லவா முசோலினி? மேலும் வீரனுக்கு ஏது இடியும் மின்னலும்?

முசோலினி விமானத்திலிருந்து கீழே இறங்கியதும் ஒரு பீரங்கி மீது ஏறி நின்று கொண்டு பிரசங்கம் செய்யத் தொடங்கினர். "நாம் போர் செய்ய முடிவு கட்டிவிட்டோம். அதனை இத்தாலியோ சர்க்காரோ கைவிடப் போவதில்லை" என்பதுதான் அப் பிரசங்க சாரம்.

### மீண்டும் ரோம்

அங்கு (உரோம் நகரில்) யுத்த கோலா ஹலத்தைத் தவிர வேறில்லை. எங்கணும் எல்லாம் அபிசீனியாவை விழுங்கி விடலாமென்று வாய் பிளந்து கொண்டிருக்கிறார்கள். காரிபால்டி என்ற இத்தாலிய விடுதலை வீரரின் பாரம்பரையைச் சேர்ந்த ஜெனரல் கியூஸெபே ஒரு செஞ்சட்டை ஸ்தாபனத்துடன் அபிசீனியாவுக்குச் செல்கிறார். முசோலினியின் புதல்வர்களாகிய விட்டோரியோ, புரூனோ ஆகியோரும் போர் முனைக்குச் செல்கிறார்கள். பொதுவாக கருப்பு மக்களென்றால் அவர்கட்கு கசக்கின்றது. ஆனால் ஒரு காலத்தில் கருப்பு நாடாகிய ஆப்ரிக்காவிலிருந்து தான் உரோமர் நாகரிகம் படித்தனர்! அதனைக் கூறினால் விடுவாரா முசோலினி?

ஒன்றுமட்டிலும் நிச்சயம். நியாயமாகவோ அநியாயமாகவோ ஒரு ஐரோப்பியன் ஏதேனும் செய்ய முயன்றானால் பக்கத்திலுள்ள அவன் ஜாதியான்—ரெல்லால்-காரிபால்டியின் தம்பியானாலும் சரி, மாஜினியின் அத்தை பிள்ளையானாலும் சரி,—சக்தியுடன் பாய்ந்து விடுவார்கள். இந்த 'கேவலமான' குணம் புண்ணிய பூமியில் பிறந்த ஹிந்து மகான்களுக்கு மட்டிலும் கிடையாது. அதனாலேதான் இந்தியர்கள் ஓங்கியோங்கி வாழ்கின்றார்கள் தினந் தினம்—

எனக்கு இத்தாலியரின் 'மண்டைகவுர'வத்தைக் கண்டதும் பிடிக்கவே இல்லை. அதனை வாய்விட்டுக் கூறினேனானால் என் வீணையும் போய்விடும்; பூணூலும் போய்விடும். அதோடு தாடியைப் பிடித்திழுத்து தமிழ் சினிமா நாரதனாக்கினாலும் ஆக்கி விடுவார்கள். மேலும் அன்று நான் தேநீர் பருகவில்லை யென்று முசோலினிக்கு நிரம்ப கோபம் உண்டல்லவா?

### துருக்கி

ஆதலால் நேராகப் போய் விட்டேன் துருக்கிக்கு. ஏன் துருக்கி சென்றேன் தெரியுமா? அபிசீனியர்கள் என்போர் மகமதியர்கள். துருக்கியரும் மகமதியர்கள்தாம். ஆதலால் மகமதியர்களெல்லாம் ஒன்று சேர்ந்து கொள்ளக் கூடும். நமது இந்துப் புண்யவான்களைப் போன்றவால்லவே மகதியர்கள். ஆதி திராவிடனை நாயக்கர்களும், நாயக்கரை முதலியாரும், முதலியாரை நாயுடுவும், நாயுடுவை கவுண்டர்களும், எல்லோரையும் பார்ப்பனர்களும் காட்டிக் கொடுக்கும் வழக்கம் முஸ்லிம்களிடையே காண முடியுமா?

நான் கிரீஷியன் ஆர்ச்சி பெலகோவுக்கு நேரே சென்றதும், என்ன ஆச்சரியம்! ருமான்ய தேசத்திலிருந்து படைபடையாக மகமதியர்கள் துருக்கி நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களைக் காண என் மனம் பட்டபாடு மிக. உடன் ஒரு ருஷ்யனைப்போல வேஷம் போட்டுக் கொண்டு மெதுவாக அவர்களிடையே தோன்றினேன் ருஷ்யனென்றால் துருக்கி, ருமான்யா முதலிய தேசங்களில் மிகுந்த மதிப்பு—காரணம் ருஷ்யர் எல்லோரும் நன்கு உழைப்பவர்; மக்களிடம் அன்பாக இருப்பவர். என்பதோடு சூழ்ச்சி, வஞ்சகம், தற்பெருமை, பேராசை, வெள்ளையர் கருப்பர் என்ற ஏற்றத்தாழ்வு ஒன்றும் கிடையாது.

நான் ருஷ்யனாக தோன்றியதும் ஒரு தலைவரிடம் "ஏன் நண்பரே! நீங்கள் துருக்கிக்குச் செல்கின்றீர்கள்?" என்றேன்.

அவர் முகமலர்ச்சியோடு:—எஜமானரில் எங்கட்கு விவசாயத்திற்குரிய நில புலன்களைத் தந்து உதவுகிறார் கமால் பாஷா. அப்படியிருக்க ஏன் நாங்கள் ருமான்யாவில் கிடந்து கஷ்டப்படவேண்டும்.

நான்:—நிரம்ப சரி. கமால் வாழ்க! பாழாகக் கிடக்கும் நிலங்களை ஜனங்களுக்குக் கொடுக்கிறாரே! ஜனங்களும் வயிறார சாப்பிடுவார்கள்; சர்க்காருக்கும் வருமானம் வரும். (அப்பால் சிரித்துக்கொண்டு) இந்த ஏற்பாட்டின் மூலம் உலகில் நல்ல பெயரெடுக்கிறார் கமால்!

அவர் சிரித்தார்.

நான் மேலும்:—நற்பெயரோடு ஆள் துணையும் (தன்னாட்டில்) பெற்றுக் கொள்கிறார். ஒருகால் ஜனத்தொகை குறைவு என்பதற்காக விதேசியர் படையெடுத்து வந்து விடமாட்டார்களன்றோ?

இதற்கும் அவர் சிரித்தார்.

நான்:—மற்ற தேசத்து சர்வாதிகாரிகள் குழந்தைகளைப் பெறச்சொல்லி தொகையைப் பெருக்கிக்கொள்கிறார்கள்.

கமால் ஒரேபடியாக வளர்ந்த மனிதர்கள் உறவையே பெற்றுக் கொள்கிறார். ஒருகால் 'ரெடி மேட்' ஆட்கள் வேண்டும் போலிருக்கிறது.

அவர் அதற்கும் சிரித்தார். அப்பால் கூறினார்:—திருவாங்கூரில் எவ்வளவோ காலி நிலமிருந்தும் விவசாயப் பயிற்சி பெற்ற அந் நாட்டு மக்கட்கு மட்டிலுந்தானே 10 ஏக்கர் விகிதம் கொடுக்கப்படும் என்று கூறுகிறார்களாம். அப்படியிருக்க ஒரு மதத்தைச் சேர்ந்தவர்களென்பதற்காக 60 ஆயிரம் விதேசியர்கட்கு ஒருவர் தம் நாட்டில் இடங் கொடுப்பதென்றால் இலேசா?

நான்:—(திடுக்கிட்டு) 60 ஆயிரம் பேர்களா வருகின்றீர்கள்?

## சூவெஸ்

அவர் ஆம் என்று சிரித்தார். உடன் வணக்கம் தெரிவித்துவிட்டு நேராக நான் அபிசீனியாவுக்குச் சென்றேன்.

செல்லும்போது வழியில் சூவஸ் கால்வாய் என்று ஒன்று இருக்கிறது. அதில் என் கவனம் இழுக்கப்பட அங்கு இறங்கினேன். அக்கால்வாய் உத்தியோகஸ்தர்கள் யாவரும் "கிசுகிசு" என்று முணுமுணுத்துக் கொள்கிறார்கள். 'கிசுகிசு' வென்றால் நாரதனால் பொறுத்துக் கொண்டிருக்க முடியுமா? நான் கால்வாய் தலைமை அதிகாரியிடம் சென்றேன். அவர் உண்மையை கூறிவிட்டார். என்ன தெரியுமா? "அபிசீனியா யுத்தம் ஏற்பட்டால் இத்தாலிய கப்பல்கள் சூவெஸைக் கடந்து செல்லாமல் அவற்றை தடைசெய்து விடலாமா?" என்ற யோசனை இருக்கிறதாம் ஆங்கிலேயருக்கு.

இது எவ்வளவு துணிச்சலான யோசனை. தமக்கு சூவெஸ் மூடப்பட்டால் விடுவாரா முசோலினி? உலக யுத்தத்திற்கு சூவெசே காரணமாகி விடுமோ?

எப்படியும் ஆங்கிலேயர் யுத்தத்தில் சிக்கிக்கொள்ளாமல் தப்பமுயல்வார்கள். ஒருகால் சிக்கிவிட்டால் அப்போது தெரியும் உண்மை சாயம்.

நான் கால்வாய் உத்தியோகஸ்தரிடம் "நல்ல யோசனை; அதனை யோசித்துச் செய்யுங்கள்" என்று கூறிவிட்டு அபிசீனியா புகுந்தேன்.

## அபிசீனியாவில்

அம்மம்மா! என்ன மூஸ்தீபு! என்ன தயாரிப்பு! என்ன போர்க்கோலம்! ராஸ்துபாரி (அபிசீனிய மன்னன்) நாமம் எங்கும் போற்றப்படுகிறது. ஜனங்களெல்லாம் யுத்தத்தைப்பற்றியே பேசுகிறார்கள். வீடெல்லாம் ஆயுதம்; ஆலைகளெல்லாம் ஆயுதம் செய்யும் ஓசை. வெளிநாட்டிலிருந்து ஏராளமாக ஆயுதங்கள் வந்திருக்கின்றன. இனி தேவைக்குப் போதுமானவைகூட வரவிடாது தடை செய்வார்கள் சர்வதேச சங்கத்தார்! அந்தத் தடைக்கு யுத்த மொழிப்பு முறை என்று வேண்டுமானால் பெயர்வைத்துக் கொள்ளக் கூடும். இதனை எந்த அபிசீனியனும் அறியாமலில்லை. ஆதலால்தான் அபிசீனியாவில் யுத்த வேகம் புகைந்து கொண்டிருக்கிறது. ஐரோப்பிய ரென்றால் பெரிய எரிச்சல் அபிசீனியருக்கு! அதிலும் விசேஷமாக இத்தாலியரென்றால் சரிதான்.

நான் ராஸ்துபாரியிடம் சென்றேன். எனக்கு—இந்தியனென்று தெரிந்ததும்—கவுரவமான வரவேற்புக் கொடுத்தார். அவரிடம் யுத்தம் பற்றி பேசியதில் அவர் கூறினார்:—

நாங்கள் யுத்தத்தை தவிர்க்க எவ்வளவோ நியாயம் பேசினோம்; முசோலினி கேட்கவில்லை. கருப்பர்களென்றால் தம் நாட்டைப் பெருக்கிக்கொள்ள லாயக்கான கோழைகள் என்று எண்ணியிருக்கிறார். அந்த அவமானத்தைப் பொறுக்க முடியாததால் எப்படியும் போர் புரிந்து தீர்த்து விடுவதென்று நிச்சயித்து விட்டோம். அபிசீனியாவின் கடைசித் துளி இரத்தம் இருப்பது வரையிலும் போர் நிகழும். பெரும் பான்மையும் முசோலினியின் கை தளரும்படி செய்வோம்: எங்கள் நாட்டு ஜனத் தொகை சுமார் ஒரு கோடி. அதில் 30 லட்சம் பேர் எந்த நிமிஷத்திலும் போருக்கு தயாராக விருக்கிறார்கள்.

நான்:—முசோலினிக்கு 9 லட்சம் இருப்பதாகக் கேள்வி.

ராஸ்துபாரி:—இருந்தாலும் எங்கள் நாட்டில் புகுந்து அவர்கள் போர் செய்வதென்றால் இலேசா? இங்குள்ள காடு மலை எல்லாம் மூடுக்குகள் எங்கட்கல்லவா தெரியும்?

நான் அதிகம் பேசக் கூடாதல்லவா? சரி யென்று வந்து விட்டேன்.

---

ஆப்ரிக்க சுதேசிகள் இரட்டைக் குழந்தைகளில் ஒன்று தந்தைக்கும் மற்றொன்று துஷ்டதேவதைக்கும் பிறக்கின்றனவென்று கருதுவதால், குழந்தைகள் பிறந்ததும் கொன்று விடுகிறார்கள்.





## ரிசர்வ் பாங்கு பங்குதாரர்களுக்கு அறிக்கை

இந்திய ரிசர்வ் பாங்கில் பங்கு எடுத்தவர்கள் 1935-ம் வருஷம் ஜூலை மாதம் 8-ந்தேதி முதல் தாங்கள் பங்கு எடுத்தவர்கள் என்பதை நிரூபிக்கும் பங்கீடு கடிதங்களை, கல்கத்தா ஹேரார் தெரு 7-ம் நம்பரிலிருக்கும் இந்திய ரிசர்வ் பாங்க், பங்கு கொடுக்கும் இலாகாத் தலைவருக்கு ரிஜிஸ்டர் மூலம் அனுப்பவேண்டும். இக் கடிதங்களுடன் மாதிரிக் கையெழுத்துள்ள பங்குதாரின் கார்டுகளிரண்டும் அனுப்பவேண்டும்.

எந்த ஆபீஸ் மூலம் பங்கு கேட்டார்களோ அந்த ஆபீஸில் 1935 ஆகஸ்டு 12-ந் தேதி முதற்கொண்டு பங்குதாரர்கள் பங்கு ஒதுக்கப்பட்டிருப்பதாக அறிவிக்கும் கடிதங்களை காட்டுவார்களானால் அவர்களுக்குப் பங்குப் பத்திரங்கள் அளிக்கப்படும். பங்குப் பத்திரம் பெறுபவர்கள் பங்குக் கடிதங்களில் குறிப்பிட்டிருக்கும் நிபந்தனைக் குட்பட்டவர்களென்று கருதப்படுவார்கள்.

இதுவன்றி பங்கு பத்திரங்களை தங்களுக்கு நேராகவோ ரிஜிஸ்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டுமென்று விரும்புகிறவர்கள் எந்த ஆபீஸ் மூலம் பங்கு கேட்டார்களோ அந்த ஆபீஸுக்கு தம் முழுவிலாசம் எழுதப்பட்ட பெரிய கவர் ஒன்று அத்துடன் அணா $4\frac{1}{2}$-க்கு ஸ்டாம்பும் அனுப்பவேண்டும். பங்குக் கடிதங்களின் பிரதிகளுடன். பாங்கின் பங்குதாரர் ஜாப்தாக்களில் பங்கு மாற்றப் பதிவுகள் 1935ம் வருஷம் ஆகஸ்டு 12ந் தேதி முதல் செய்யப்படும். இத் தேதியிலிருந்து 1935 செப்டம்பர். 30ந்தேதி முடிய பம்பாய், டெல்லி, சென்னை, ரங்கூன் இந் நகரங்களைச் சுற்றியிருக்கும் பங்குதாரர்களின் பெயர்கள் அடங்கிய ரிஜிஸ்டர்கள் கல்கத்தாவிலேயே இருக்கிறது. ஆதலால் எல்லாக் கடிதங்களும் பங்கு மாற்றும் பதிவு இலாகா மானேஜர், இந்திய ரிசர்வ் பாங்க், போஸ்ட் பாக்ஸ் நம்பர் 552, கல்கத்தா என்ற விலாசத்துக்கே அனுப்ப வேண்டும். மேலே சொல்லப்பட்ட நகரங்களி லிருக்கும் கிளை ஆபீஸுக்கு இது சம்பந்தமான கடிதங்களை அனுப்பக்கூடாது. 12-8-35 முதல் 30-9-35 வரையில் பங்கு மாற்றப் பதிவுகளுக்காகச் செலுத்தப்படும் ஸ்டாம்புத் தொகை வங்காள ஸ்டாம்பு ஆக்டின்படியே செலுத்தப்பட வேண்டும். மேலே கூறியுள்ள எல்லா ஆபீஸ்களிலிருந்து 1935-ம் வருஷம் ஆகஸ்டு 12-ந் தேதி முதல் பங்குதார்களும் ஷெட்யூல்ட் பாங்குகளும் தாகர்களும் பாங்கின் பங்கு மாற்றும் பத்திர பிரதிகளை பெறலாம்.

பங்கு மாற்றும் பதிவுகளைப் பற்றியும் யாருக்குப் பங்கு சொந்தம் என்ற தகராறுகளைப் பற்றியும் இது போன்ற மற்றும் சில விஷயங்களைப் பற்றியும் பாங்கின் கவர்னரும் உதவி கவர்னர்களும் கவனிப்பார்கள் முன் குறிப்பிட்டப் பட்டணங்களில் தனி போர்டுகள் நியமிக்கும் வரையில். பாங்கினால் கொடுக்கப்படும் லாபப் பங்குகளை பங்குதார்கள் தங்கள் பாகங்களுக்கு அனுப்பச் சொல்லியோ அல்லது தங்கட்கு வேண்டியவர்கள் எவரிடமாவது கொடுக்கச் சொல்லியோ ஆக்ஞைகள் அனுப்பினால் அவைகள் அதிகாரிகளால் ஸ்வீகரிக்கப்படும். லாபப் பங்குகளைப்பற்றி பங்குத் தொகைகளின் செக்குகள் பாங்கில் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட பங்குதார்களின் விலாசத்துக்கே அனுப்பப்படும்.

## சென்னை சுயமரியாதை மகாநாடு

சென்னை 3-வது சுயமரியாதை மகாநாடு ஞாயிற்றுக்கிழமை காலை 8–30 முதல் பச்சையப்பன் கல்லூரியில் நடைபெற்றது. தோழர் வல்லத்தரசு தலைமை வகித்தார். தோழர் ப. ஜீவானந்தம் சமதர்மக் கொடியேற்றினர். வரவேற்புப் பிரசங்கத்தை தோழர் T. N. ராமன் ஆற்றினர். தோழர் கே. வி. அழகிரிசாமி திறப்புவிழா பிரசங்கம் செய்தார்.

பகல் நிகழ்ச்சிகள் 12–30 ஓடு முடிய 2–30 முதல் மீண்டும் மகாநாடு ஆரம்பித்து தீர்மானங்கள் நிறைவேறிற்று. முக்கியமான தீர்மானங்கள் ஈரோடு வேலை திட்டத்தை யொப்புக் கொண்டதும், இந்துமட மசோதாவை நிறைவேற்றி சட்டமாக்க விரும்பியதுமாகும். சென்னையில் ஒவ்வொரு 'சேரி'யிலும் இலவச வாசகசாலைகள் நிறுவவும், பஞ்சமர்கட்கு இடமளியாத ஹோட்டல்கள், நாவிதர் கடைகள் ஆகியவற்றிற்கு லைசென்ஸ் கொடாதிருக்கவும் மேயரிடம் கேட்டுக் கொண்ட இரு தீர்மானங்கள் அவசியமானவை. வேறிரண்டு தீர்மானங்களால் இரும்தார் மசோதாவை நிறைவேற்றிய பொப்பிலிராஜாவை பாராட்டி, பார்ப்பன ரல்லாதாருக்கு நன்மை செய்ததற்காக வென்று ஜஸ்டிஸ் கட்சியை மெச்சி, தம் மனோ நிலைமையை மகாநாடு காட்டிக் கொண்டது. பெண்கட்கு உத்யோககம் கொடுப்பதுபற்றியும், ஜுபிலி நிதியின் ஒரு பகுதியைக் கல்விக்குச் செலவிடுவதைப் பற்றியும் மற்றிரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

### ரங்கூன்
### மார்க்கட் நிலவரம்

ரங்கூன், ஜூலை 9.

| | |
|---|---|
| படகு நெல் | 99/100 |
| ரயில் நெல் | 99/100 |
| பெரிய மில்லரிசி ஸ்பெஷல் | 236/ |
| நசேன் சிறிய மில்லரிசி | 247/8 |
| நசேன் எஸ். க்யூ | 255/ |
| மீடான் பஜார் | 258/8 |
| மீடான் எஸ். க்யூ | 267/8 |
| செடி புழுங்கல் அரிசி | 262-8/270 |
| மில்சார் | 260/272-8 |
| முழுப் புழுங்கல் | 255/260 |
| யதெலே | 270/280 |

---

யூரல் மலைப் பிரதேசத்திலுள்ள பூமியில் இரும்பு உலோக மண்ணை உடைத்தெறிவதற்காக சமீபத்தில் 100 டன் நிறையுள்ள வெடி மருந்து உபயோகிக்கப்பட்டது. வெடியால் ஏற்பட்ட பெரிய அதிர்ச்சியை 1000 மைலுக்கப்பாலுள்ள கருவிகள் காட்டினவாம். இதுவரையில் அவ்வளவு பெரிய வெடி வைக்கப்பட்டதில்லையாம்.

---

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd.,
at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

This page is in colour

